


தொகுதி-௧௨.] ஆனந்தஹு ஐப்பசிமீ [பகுதி-௧௨.
Vol. XII. October—November, 1914. No. 12.

# பஞ்சாயமுதலியசங்கங்களின் பழமையும் முறைமையும்.

“செந்தமிழ்” (தொகுதி-௧௨ பகுதி ௧௧-ல்) ௪௧௬-ம் பக்கத் தொடர்ச்சி.

———:(o):———

திருவிளையாடற்புராணம் மாமனாகவந்து வழக்குரைத்தபடலம் செய். 12:-

“புலர்ந்தபின்றாயத்தோரைப்புரவலனாணையாற்றல்
வலந்தருமன்றத்தேற்றிமறித்தனையிருத்தியாம்போந்
தலந்தருமறிவான்மூத்தோரனைவருமிசையவந்தச்
சலந்தருவழக்கைத்தீர்த்துத்தருகுவம்போதியென்றார்”

இதிற்சொல்லப்பட்ட பஞ்சாயசபை மன்றம் என்னும் பெயரால் வழங்கப்பட்டிருக்கிறது. அது, மன்று+அம் மன்றம் என ராஜமஹா சபையின் இயைபுடைய கிளைச்சபையென்று பொருள்படுகிறது. இம்முறையானே பின்னும் அறநவில்மன்றம் என்று கூறியிருப்பதும் இதனை வலியுறுத்துதலாற் பஞ்சாயங்கள் கிளைச்சபைகளாகவும் நாட்டப்பட்டிருந்தனவென்பது நன்குவிளங்கும்.

இவ்வாற்றால் மன்று என்பது ராஜமஹாசபையையும், மன்றம் என்பது ராஜமஹாசபையி னியைபுபெற்ற கிளைச்சபையையுமுணர்த்தும் சொற்களேயாம். ஆயினும் அவை இலக்கணையாற் பிறசபைகளுக்கும், பலர்கூடும்பொதுவிடங்களுக்கும் பெயராய்வழங்கப்பட்டுவந்தமையால் ‘புரவலனாணையாற்றால்வலந்தருமன்றம்’என்றும்‘அறநவில்மன்றம்’ என்றும் பஞ்சாயசபை விசேடிக்கப்பட்டிருக்கிறது. இதனால் மதுரையிற் பஞ்சாயசபையின்வேறாகிய (தமிழ்ச்சங்கமுதலிய) பொதுக்கூட்டங்களிருந்தனவென்பதும் அவை மன்றமென்னும்பெயரால் அக்காலத்து

*

வழங்கப்பட்டனவென்பதும் வெளியாம். பஞ்சாயசபை "புரவலனாணை யாற்றால்வலந்தரும்" என்று விசேடிக்கப்பட்டமையால், தமிழ்ச்சங்க மவ்வாறன்றிப் புலவரதாணையாற்றால்வலந்தருமன்றமாகியிருந்ததென் பதும், அடைகொடாதகூறில், மன்றமென்றதணையேகொண்டு, திருவாலவாயுடையாராகியதாம் தலைவராயிருந்துநடத்துந் தமிழ்ச் சங்கத்திற் சொல்லுவான்செல்லுமென்பதுகருதி, அங்ஙனஞ் சேறலை விலக்குதற்கே புரவலனாணையாற்றால்வலந்தருமன்றமென்று விசேடிக் கப்பட்டதென்பதும் குறிப்பாற்பெறப்படுகின்றன.

"புரவலனாணையாற்றால்வலந்தருமன்றம்" என்பதற்குத் தாம் செய்யுந்தீர்ப்பை அரசனாணையால் நிறைவேற்றுவித்து வலியுறுதலைச் செய்யும்(நியாய)சபையென்பது பொருளாதலால் நியாயசபைகள் ராஜாக்ஞையினுதவிபெற்றிருந்தனவென்பது நன்குவிளங்கும்.

இனி, இவ்வாறன்றிப் "புரவலனாணையாற்றால்மறித்தனை மன்றத் தேற்றியிருத்தி" எனக்கூட்டி, அரசனாணையென்றுசொல்லிமறித்து, மன்றத்தேற்றியிருப்பாயாக என்றார்; எனக்கொள்வோமாயின், மன்றத் தேற்றுவதற்கு அரசனாணையென்றுசொல்லிமறிக்கவேண்டுமென்னும் நியமமில்லையாதலானும், அதுதான் செய்தவழியும் பயன்படாமையா னும், பிறவாற்றானுமேற்றுதலைவிலக்கி விதந்துகூறவேண்டாமையா னும், எவ்வாற்றானும் எதிரியை மன்றத்தேற்றியிருக்கவேண்டுமென் பதே கருத்தாகையானும் அதுபொருந்தாதென்க.

"அலந்தருமறிவான்மூத்தோரனைவருமிசைய" இங்கு அனைவரு மிசையவென்றதை ஆராயுமிடத்து, சபையோர்பெரும்பாலோரிணங் கியதீர்ப்பு, எல்லோருமொருங்கிணங்கியதீர்ப்பு எனப் பஞ்சாயத்தீர்ப்பு இரண்டுவகையுண்டென்றும், அவற்றுட் பெரும்பாலோரிணங்கிய தீர்ப்பு வழக்கிழந்தோராற் பெருமன்றிற்சென்று மறுவழக்கிட்டு மாற்றவுமியலுமென்றும், எல்லோருமொருங்கிணங்கியதீர்ப்பு ஒருவாற் றானுமாற்றவொண்ணாதவலியுடையதென்றும், இவ்விரண்டனுள் எவ்வாற்றானு மாற்றவொண்ணாதவலியுடையதீர்ப்பை உனக்கு அனு கூலமாகச்செய்விப்பேன் என்னுங்கருத்தால் "அனைவருமிசைய" என்றா ரென்றும் விளங்குகின்றன.

ஷை படலம் செய். 16:—

"சென்றனன்முறையோவென்றுத்திருந்தறத்தவிசினேர்மு
னின்றுரையாடினுள்கேட்டறிந்தனர்நீதிநூலோர்"

என்றதில் நியாயசபை அறத்தவிசு என்றபெயரால் வழங்கப்பட்டிருக்கிறது. இப்பெயர்ப்பொருளை யுற்றுநோக்குங்கால், அறம்-அறக்கடவுள்; தவிசு-ஆசனம் (இருக்குமிடம்) ஆதலால் அறக்கடவுளிருக்குமிடமெனவிளங்கும். இதனுற் பஞ்சாயசபை சிறிதும் நியாயந்தவறுதென நன்குமதிக்கப்பெற்றிருந்ததென்பதும் பெறப்படும்.

அறத்தவிசு என்றதற்கு அறக்கடவுளிருக்குமிடமெனப் பொருள் கொள்ளவேண்டுமென்பதை ஷை படலம் 21-ம்பாட்டில் "உறுதியான தருமமேங்கோளித்ததேகோலேன்றறத்தவிசிற்சார்வார்" என்றதனுல், ஒருவரைக்காணச்செல்வோன் அவர் தப்பாதிருக்குமிடத்தை நாடிச் செல்வதியல்பாதலால் அறத்தைத்தேடிக்காணச்செல்லும் தனபதி வணிகரும் அவ்வறம்வீற்றிருக்குமிருப்பாகிய நியாயசபையைநாடிச் செல்வார் என்பார் அறத்தவிசிற்சார்வார் என நூலாசிரியர்தாமே குறிப்பால் வெளியிட்டிருக்கின்றனர்.

இப்பொருள்பற்றியே பஞ்சாயசபைக்குத் தர்மாசனம் என வடமொழிப்பெயர்வழங்குவதும், அச்சபையோரைத் தர்மாசனத்தார் என வழங்குவதும் இங்குநோக்கத்தக்கது. இது தொன்றுதொட்டவழக்கென்பதை 'அரசுகோல்கோடினுமறங்கூறவையத்து' என்னும் சிலப்பதிகாரத்துள்ள அறங்கூறவை என்பதற்கு "தர்மாசனத்தார்வழக்குரைக்குமிடம்" என்றெழுதப்பட்டுள்ள விசேடவுரையாலும், சிலசிலாசாசனங்களாலு மறியலாம்.

"உரையாடினுள்" என்றதனுல் இக்காலவழக்கம்போல் எழுதிக்கொடுக்கவேண்டுமென்னும் நியதியில்லையென்பதுபெறப்படுகிறது. இது எழுதப்படிக்கத்தெரியாத எளியவர்களும் முறையிடுவதற்கு மிகவுமுபகாரமாயுள்ளது.

ஷை படலம் (செய் 30) "நரைமுதுப்வியன்னுன்சொற்கேட்டனு நடுங்கிச்சான்ரே •ரிருவர்சோல்வழக்குமேற்கோண்டனுவதித்திரண்டு நோக்கி" என்றதனுற் பஞ்சாயசபையார் தாம்அறியாமையால் நியாயம்

தவறினும் தமக்குப் பாவமும்பழியுமெய்துமென்னுமச்சத்தோடு, உபய வாதிவழக்கையும் ஊன்றியுணர்ந்து, தாமுணர்ந்தவாறவர்க்குத்தோன்ற அனுவதித்துக்காட்டி, அவரது மறுதலையின்மைகண்டு, வழக்கின் உண்மை தெரிந்துவந்தாரென்பது விளங்குகின்றது.

௬௪ படலம் (செய் 33) "மனவலித்தாயத்தார்தம்வழக்கிழுக் கடைந்ததீது, நனைவழிவேம்பன்றேறிற்றண்டிக்கும்நம்மை" என்ற தனால் அக்காலத்தும், ஒருமன்றத்துட் பொய்க்கரிகூறினுரைத்தண்டிப் பதற்கு அம்மன்றத்தார்க்கதிகாரமில்லையென்பதும், அம்மன்றத்தின் பெருமன்றால் (அதாவது ராஜசபையால்) தண்டனையடைந்துவந்தா ரென்பதும் விளங்குகின்றன.

பஞ்சாயசபை, அரசனகப்பட எல்லோர்க்கும் பொதுமையினின்ற மையாற் பொதுவென்றும், அதுகூடுமிடமாகிய (மன்றகம்) மண்டகம், மண்டபம், மடம் என்னும் இவை பொதியில் என்றும், இவை, முறை யிடுவோர்சென்று, எதிரிநெறிகடந்திழைத்த பழியுரைக்குமிடமாதலால் அம்பலம் (அம்பல்+அம்) என்றும் வழங்குவதுண்டு. இச்சபையின் பிரதிநாமமாகிய (சமூகம்) சமுகம் என்பதும், போதியிலின்மொழி பெயர்ப்பாகிய சமஸ்தானம் என்பதும் இக்காலத்தும் ராஜஸ்தானங்க ளுக்குப்பெயராய் முறையிடுவோர்முதலானோரால் வழங்கப்பட்டுவரு வதைநோக்குங்கால்,பஞ்சாயசபைகளினதிகாரமொழிந்தபிற்காலத்தில் அச்சபைகளின்நிர்வாகத்தை ராஜஸ்தானங்கள் வகித்திருக்கவேண்டு மென்பதும், அச்சபைக்குத் தொன்றுதொட்டுவழங்கிவந்த வழக்கப் படியே முறையிடுவார்முதலானோர், ராஜஸ்தானங்களை இன்றும் சமு கம், சமஸ்தானம் என்னும் பழையபெயரால் வழங்கிவருகிறார்களென் பதும் நன்குவிளங்கும்.

இன்னும் புத்தசங்கமுதலிய சமயசங்கங்களும் ஏழிசைச்சங்கம், பட்டி(மன்றம்)மண்டபம், தமிழ்ச்சங்கமுதலிய கல்விச்சங்கங்களுமிருந் தனவென்பது சரித்திரங்களால்விளங்குகின்றன. இவையேயன்றிப் பல கலைவல்லாரையும் பரிசோதித்துப் பரிசளிக்கும்மன்றங்களும் பலவுள. அவற்றுள் 'மன்றப்பலவின்' என்னும் புறப்பாட்டிற்சொல்லும் மன்றமு மொன்றென்பது அதனைப்படிப்போர்க்கு நன்குவிளங்கும்.

சோழவம்சசரித்திரம் பக்கம் 52-லிருந்து 56-வரையுள்ள ராஜ ராஜன்முதலிய சோழவரசர்சாசனங்களாலும் ஊர்தோறும் பலவேறு சபைகளிருந்து உலகநடையான பலவேறுகாரியங்களைவகித்திருந்தன வென்பதும், காரியநிர்வாகசபையோரைக் (வாரியப்பெருமக்களை) குடவோலையிட்டுத் தெரிந்தெடுக்குமுறைமுதலிய சபைவிதானங்கள் இன்னபடியிருந்தனவென்பதும் ஊன்றியுணர்வார்க்கு நன்குவிளங்கும். சிலசிலசாசனங்களினிறுதியில்(அச்சாசனத்தைப்)"பிரமாணம்செய்து கொடுத்தோம் சபையோம்" என்றெழுதியிருப்பதைநோக்கும்போது கிராமசபைகள் சாசனப்பதிவு (ரிஜிஸ்தர்) செய்யுமதிகாரம்பெற்றிருந் தனவாகவும் அறியலாம். இது பத்திரமெழுதிக்கொடுப்பவருக்குச் சுலபமாகவும், பொய்ப்பத்திரம்பதிய வியலாததாகவுமுள்ளது.

இன்னும் கிராமசபைகளைப்பற்றி ஆராயுமிடத்து அவையும், மன்றம், பொதியில் என வெவ்வேறுபெயர்பெற்று வேறுவேறுகாரியங்களை வகித்துவந்தனவெனவும் விளங்குகின்றன.

திருமுருகாற்றுப்படை 226-ம் அடியில் "மன்றமும்பொதியிலும்" என்பதனுரையுள் மன்றம் என்பதற்கு "ஊர்க்குநடுவாய் எல்லோரு மிருக்குமரத்தடி" எனப் பொருளுரைக்கப்பட்டிருக்கிறது. இதனால் மன்றம் என்னுங்கூட்டம் கிராமப்பொதுக்கூட்டமென்றும், அது, ஒரு வர்க்குரியதன்றி ஊருக்குப்பொதுவாயுள்ள மரத்தடியிற்கூடுவதுவழக்க மென்றும் வெளியாகிறது. இதனால் ஒருகட்டிடத்திற் கூடியிருக்கத் தகாத பலஜாதியாரு மொருங்குகூடியிருத்தற்குயோக்கியமாக ஊர்ப் பொதுமரத்தடி, அல்லது தோப்படிநிழலிடத்தைச் சபையோர் தெரிந் தெடுத்துக்கொண்டிருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது.

இனி, பொதியில் என்பதற்கு அம்பலம் எனப் பொருளெழுதப் பட்டமையால் அது ராஜ்யசம்பந்தமான கிராமாதிகாரங்களைநடத்துஞ் சபையென்றும், அதற்குக் கிராமந்தோறும் கட்டிடமுண்டென்றும், அதனால் அது பொதியில் எனப் பெயர்பெற்றிருக்கவேண்டுமென்றும் தோன்றுகின்றது. அவ்வதிகாரத்தைப் பாண்டிநாட்டில் வகித்திருக்கும் கிராமாதிகாரிகளுக்கு அம்பலகாரர் என இக்காலத்தும் பெயர்வழங்கு வதால் இவ்வதிகாரம் முற்காலத்து அம்பலம் என்னும் கிராமசபை யோரிடமிருந்ததென்பது நன்குவிளங்கும்.

இவ்வாறு பலபல உலகநடைகளும் சபையோர்பொறுப்பிலிருந்த முற்காலத்தில் அவ்வுலகநடையிலொன்றாகிய தமிழ்மொழிவழக்கையும் சீர்குலையாது தன்னிலைநிறுத்தற்குத் தமிழ்நாட்டிற் பலசங்கங்களிருந் திருக்கவேண்டுமென்பது பொருந்தாததன்று.

"தண்டமிழ்ச்சங்கத்தனியிறையவனே" என்னும் அழகர்கலம் பகத்தால், பாண்டிநாட்டிலிருந்த தலையாயதமிழ்ச்சங்கங்களின்வேறாய்த் திருமாலிருஞ்சோலையி லொரு தமிழ்ச்சங்கமிருந்ததாகவெளியாகிறது. மிக்கபிரஸித்தியில்லாமையாலும் பாஷையின்பாதுகாப்பு ஒருமுறையே பெற்றிருக்கவேண்டுமாகையாலும் அது ஒருகிளைச்சங்கமாயிருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகின்றது. இவ்வாறு முதலுங் கிளையுமாகப் பாண்டிமண்டலத்திற் றமிழ்ச்சங்கங்களிருக்குமாயின், சோழமண் டலத்தில் ஒரு கிளைச்சங்கமுமிருந்திருக்கமாட்டாதென்பது பொருந் தாததேயாம். அங்கு மொருதமிழ்ச்சங்கமிருந்ததென்பது ஒரு புற நானூற்றுச்செய்யுளால் விளங்குகின்றது. அதனையும் பின்வருமாற்று லறியலாம்.

(தொடரும்.)

திரு. நாராயணையங்கார்,
பத்திராதிபர்.

---

## சங்கீதத்தின்பெருமையும் அதன் உற்பத்தியும்.*

——:o:——

உலகெல்லாம் தனது ஒருசொல்லால் உண்டாக்கி, அவை யாவற் றிற்கும் தானே உயிராய், ஆனந்தமூர்த்தியாய், அநந்தகல்யாணகுண சீலனாய் ஆண்டு நடத்திவரும் கர்த்தன் இரு பொற்பாதகமலங்களை வணங்கி, சொல்லத்தொடங்குகிறேன்.

உலகுக்குமுதல்வனானகர்த்தன், முதல்முதல் நாதசொரூபியாய்ப் பின் ஜீவனாய், ஜீவர்களின் உணர்வாய், உணர்வில் அறிவாய், அறிவில் ஆனந்தமாய், ஆனந்தத்தில் நாதமாய், நாதத்திற் கீதமாய், கீதத்தில் லயமாய், ஆனந்தநர்த்தனஞ்செய்து உலகைப் பரிபாலிக்கிறான்.

---

*இது மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பதின்மூன்றாம்வருஷக்கூட்டத்தில் வாசிக்கப்பெற்றது.

சத்து சித்து ஆனந்தமாய், அண்டபுவன சராசரங்கள் அனைத்தினும் நிறைந்துநின்ற அப்பரமனை உள்ளுணர்ந்தபெரியோர், தமது தூலதத்துவங்களையும் சூக்குமதத்துவங்களையும் காரணமாகிய அக்கர்த்தனிடத்தில் ஒடுக்கி, அவனிடத்துவிளங்கும் கோடிசூரியபிரபையில் தாங்களும் பிரபைபெற்று, ஜீவகாருண்யம்பாராட்டி, முத்திநிலைபெறச் சதா துதித்து வணங்கினார்கள். வணங்கியபெரியோர் அடைந்த மேம்பதவியைக்கண்டு, தாமும் அப்பதம்பெறவிரும்பி ஆனந்தமூர்த்தியை இடைவிடாது துதித்து, அவரவர்க்காகும் அளவற்றகிருபைபெற்றார் மற்றவரும். கிருபைபெற்றோர்யாவரும், மேலான அவன்புகழைச் சொல்லித் துதித்துக் கானஞ்செய்கிறார்களேயொழிய, தம்மை இழிவுபடுத்தும் லௌகிககானங்களைச்செய்யார். இக்கானமும், கானமூர்த்தியின் சிருஷ்டி திதி சம்மாரம் என்னும் முத்தொழில்போலவே, தோற்றம் விருத்தி லயத்தையுடைய அபிநயம் ராகம் தாளம் என்னும் மூன்று அங்கங்களையுடையது. இம்மூன்றையும் ஒன்றாகப்பாவித்து, முத்தொழில்மூர்த்தியைப் பத்திசெய்யவேண்டியது அவசியம். அப்படிச் செய்வதால் அவன் அருட்செயலிற்காணப்படும்யாவற்றிலும், அவனே அங்கங்குப் பரிபூரணனாய் இருந்து அபிநயித்து ஆடிப்பாடி ஆனந்த நர்த்தனஞ்செய்கிறானென்று, பிரத்தியக்ஷமாய் அறியலாம். ஆனந்தக் கூத்தாடும் முதல்வனைக்காணும் பக்தன், தானும் இன்னிசையுடன் ஆடிப்பாடிக் கர்த்தனைக்கொண்டாடுவான்.

கர்த்தனைக்கொண்டாடிய பக்தர்களும் தங்கள்தங்கள் அனுபோகத்திற்கு ஏற்றவாறு தெய்வத்தை ராஜனாகவும், பெற்றெடுத்த தாய் தந்தையாகவும், குருவாகவும், ஆப்தசகாயனாகவும், துயர்தீர்த்த மருத்துவனாகவும், அருமையாகவும், இனிய மணவாளனாகவும்பாவித்து வாயாரவாழ்த்தினார் சிலர்; தோத்திரித்து வணங்கினார் பலர்; இடர் தீர்க்க இறைஞ்சினார் சிலர்; நினைத்தவைபெறவேண்டினார் அநேகர்; பிரிவாற்றாமையாற் பிரலாபித்தார் சிலர்; கண்டடைந்த சிலர் ஆனந்தக் கூத்தாடினார்; காணவிரும்பிய பலர் தூதுபாடி உசாவினார்; உள்ளன்பு மேலிட்டு, உவந்துதுதித்தார். அவன்குணங்களை ஒவ்வொன்றாய் எடுத்தெடுத்து விஸ்தரித்து, மற்றவர் அறிய வியந்துபாடினார். தங்கள் அபாத்திரத்தைநினைத்து இரங்கினார். தம் தவறுதல்களைநினைத்து மன்னிக்கப் பிரார்த்தித்தார். காதல்மிகுந்த சிலர், அவன் திருஉருவை

நினைத்து, உணவையும் உலகையும் மறந்தார். உத்தமர்களின் ஜீவியத்தையும் அவர்கள் பகவானைத் துதித்துப் பாடியவற்றுள் உத்தமமான பாகங்களையும் ஒன்றாய்த்திரட்டி, மற்றவர்கள் பின்பற்றப் பரம்பரையாய்ச் சொல்லிவைத்தார் நம் முன்னோர். பின்னுள்ளோர், அதையே வேதமென எழுதிவைத்தார்கள். வேதத்தை ஆதாரமாகக்கொண்ட ஒவ்வொருவரும், தெய்வசந்நிதிகளிலும் பொதுஸ்தலங்களிலும், தங்கள்வணக்கத்திலும், வேதத்திலுள்ள சிலபாகங்களைத் தாமே பாட்டாகப்பாடி ஆராதித்து, ஆனந்தமடைந்துவந்தார்கள். பாடச்சக்தியில்லாதவர்கள், பாடகர்களைநியமித்துப் பாடச்சொல்லிக் கேட்டு ஆனந்தித்துவந்தார்கள். பாடுவதற்குத் துணைக்கருவிகள் பலபலசெய்து, மிகுந்ததொனியுடன் ஆர்ப்பரித்தார்கள். தங்கள்தங்கள்வருத்தம் யாவும் மறந்து, ஏகமனதாய் இன்னிசையில் ஈடுபட்டு, பகவானை ஆராதிக்கும் இந்நிலையே நன்னிலையென்றுநினைத்து மேலுலகத்திலும் தெய்வத்தை இப்படியே ஆராதிப்போமென்றுலோசித்து, மேலும்மேலும் ஊக்கங்கொண்டார்கள். தங்கள் கானத்தைப் பலமுகமாய்விருத்திசெய்ய இனியசுரங்களையும், அவைகளின் ஆலாபனத்தையும், எல்லோரும் ஏகீபவித்துச்சொல்லக்கூடிய கால அளவாகிய தாளத்தையும் ஒன்றின்பின் ஒன்றாய்க்கண்டு விருத்தியடைந்து வந்தார்கள். இவற்றில் அனுகூலமடைந்துவருகையில், தங்களுக்குச் சந்தோஷமானகாலங்களிலும், தெய்வசந்நிதியிலும், தாங்கள் சாப்பிடுங்காலத்திலுங்கூட, பாடத்தொடங்கினார்கள்.

தெருவில்விளையாடும் சிறுவர்களின்கானவிருத்தியைப்போல், நாம் கேட்கும் இனியகானமும், பலயுகங்களாகப் பல உபகரணங்களைக் கொண்டு விருத்தியாயிற்றென்று நாம் அறியவேண்டும். எப்படியென்றால், ஓசைதரும் பலகைகள் பெட்டிகள் கதவுகள் தகரத்தட்டுகள் முதலியவ்வைகளைத் தட்டி, ஜதி கணம் லயமென்னும் தாளத்துக்குரிய அங்கங்களை ஒருவரும்போதிக்காமலே சுயமாய் அறிந்துகொண்ட பேச்சறியாதபாலர்கள், தாங்கள் கொஞ்சம் பெரியவர்களாகும் பொழுது, சிறு தம்பட்டம் கொட்டாங்கச்சித்தம்பட்டம் கெஞ்சிரா முதலியவ்வைகளிற்பழகி விளையாடுகிறார்கள். அதன்மேல் அதிற் பிரியமுள்ளசிலர், பெரியவர்களாகும்பொழுது, இருப்பக்கமும் தோல்கட்டிய மத்தளம் மிருதங்கம் பேரி உடுக்கை நகரா தபிலாபோன்ற கொட்டுங்

கருவிகளைச்செய்து, கடிப்பினுல் அடித்துத் தாளத்தில்விருத்தியானுர்கள். தாளஞானம் முதன்முதல் எல்லாருக்கும் இயல்பாய் அமைந்திருக்கிறது. குழந்தைகள்பிறந்து நாலைந்துமாதத்திற்குள், சங்கீதத்தைக்கேட்கும்போது தாளத்துடன் சாய்ந்தாடுவதை நாம் அறிவோம். மேலும் ஒவ்வொருவருடைய சுவாசமும் இரத்தாசயத்துடிப்பும், காலப்பிரமாணத்தையுடையதாகவே யிருக்கிறது.

இதுபோலவே, தெருவில்விளையாடும் சிறுவர்கள், பூவரசுபோன்ற மரத்தின் இலைகளைச்சுருட்டி, அதிற் சிறுத்த ஒருபாகத்தைக் கையினுல் அமுக்கி, ஒடுங்கியதுவாரமிருக்கும்படிசெய்து அதில் ஊதியும், அதன்பின் குழலின்பருமனுக்கும் அதன்வாய்க்கும் தகுந்தவிதமாய்ச் சத்தம் பிறக்கிறதென்றுகண்டு, கீழ்மேலாயுள்ள இரண்டு அல்லது மூன்றுநாலுசத்தங்களைச் சேர்த்தும் அதில் ஒற்றுமைகண்டு சந்தோஷித்தார்கள். பின்பு துவாரமுள்ள பூசணியிலைக்காம்புகளைக் குழல்களாகநறுக்கி அவைகளின் ஒருபக்கத்தில் இலைக்குழல்களைவைத்து ஊத, குழல்கள் எவ்வளவுநீளுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு சத்தம் மந்தமாகிறதென்றும், குழல்கள் குறுகக்குறுகத் தொனியுள்ள நாதம் பிறக்கிறதென்றும் கண்டு, எல்லோரும் ஆனந்தக்கூத்தாடினுர்கள். இவர்களில் இன்னிசையிற் பிரியங்கொண்டசிலர், பெரியவர்களான பொழுது கொம்பு சங்கு மூங்கில் ஈரக்கழி நாணல் முதலியவைகளில் துளையிட்டும், மரம் பொன் வெள்ளி பித்தளை முதலியவற்றில் பலவடிவங்களுடன் குழல்செய்து துளையிட்டும், இன்னிசைபிறக்க ஊதினுர்கள். இதுபோலவே, நரம்புக்கருவிகளிலும் படிப்படியாய் விருத்தியானுர்கள். வளையக்கூடிய ஒருகுச்சியில், மெல்லியகயிறு அல்லது நரம்புகளைக்கட்டி மீட்ட, ஓசைபிறப்பதை அறிந்தார்கள். அதினின்று பெரியமூங்கில்களை விற்போல்வளைத்துத் தோல்வடங்கள்கட்டி, குணத்தொனிசெய்து மணிகளையும் சதங்கைகளையும்கோத்துத் தாளத்திற்கு இணங்கக் குறுகிய கடிப்பினுல் அடித்து, வில்லடிப்பாட்டுகள் படித்தார்கள். தந்திகள் அல்லது நரம்புகள், ஆகாயமடங்கிய ஒரு பாத்திரம் பெட்டி அல்லது சுரைக்குடுக்கைவழியாய்ச்செல்லும் பொழுது, அதிகநாதம்கொடுக்கிறதென்று படிப்படியாய்க்கண்டு, துந்தினுமா, ஒருதந்திச் சுரைக்காய்க்கின்னரிபோலொத்த வாத்தியங்கள்

செய்து, தங்கள் சாரீரத்திற்கேற்ற சுருதிவைத்துக்கொண்டு, பகவானுடையகுணங்களைவர்ணித்துப்பாடினார்கள். கைகளால்மீட்டுவதற்குப் பதில், விற்களால், தந்திகளை இழுத்து வாசிக்கக்கூடிய அகப்பைக் கின்னரிகள்போன்றவைசெய்து வாசித்தார்கள். மானிடசாரீரத்திற்கு ஒத்ததும் சுரஸ்தானங்கள்குறிப்பிட்டதுமான மிக்கசிறப்புப்பொருந்திய வீணைசெய்தார்கள். அதினின்றும் சங்கீதம், அதற்குரிய சிலவிதிகளுடன் விருத்தியாகிக்கொண்டேவருகிறது.

சிறுவர்கள் தட்டிவிளையாடும் பலகைக்கதவின் ஓசையிலிருந்து, தம்பட்டம் பேரிகை மத்தளம் மிருதங்கம் தபிலா உடுக்கை கைமத்தளம் சேமக்கலம் சல்லரி மணி சதங்கை முதலிய கொட்டுங்கருவிகளும், ஊதிவிளையாடிய இலைக்குழல்களிலிருந்து, தாரை ஒத்து நாகசுரம் முகவீணை மகுடி புல்லாங்குழல் கொம்பு சங்கு முதலிய துளைக்கருவிகளும், பல்லினாற்கடித்துக் கையினால்மீட்டிப்பிறந்த இனியநாதத்திலிருந்து, துந்தினமா கின்னரி தம்புரு அகப்பைக்கின்னரி சுந்தரிவீணை ருத்திரவீணை பேரியாழ் மகரயாழ்முதலிய மீட்டும் தந்திவாத்தியங்களும் சிறுவர் விளையாட்டிலிருந்தேதோன்றி, படிப்படியாய்விருத்தியாயினவென்று நாம் அறிகையில், நாதனது திருவிளையாட்டை எடுத்துக்கூறத் திறமையுடையோர் யாவர்!

மேற்கூறியவாத்தியங்கள், தேசத்தாரின் கைத்தொழில்திறமைக்குத்தகுந்தபடி, வெவ்வேறு உருவங்களையும் பாஷையால் வெவ்வேறு பெயர்களையும்பெறுவதேயன்றி, காரியத்தில் சங்கீதத்திற்குத் துணைக் கருவிகளாகவே வழங்கப்பட்டுவருகின்றன. இக்கானவிதியின் அருமை பற்றியும், வாத்தியங்களின் உதவிபற்றியும், ஒவ்வொருதேசத்தாரும், தாங்கள்வழங்குங்கானத்தைக் கடவுளேகொடுத்தாரென்றும், உபதேசித்தாரென்றும், செய்துகாட்டினாரென்றும் மேன்மைபாராட்டுகின்றார்கள். தினையளவுபனித்துளி எதிர்நிற்கும்மலையையும் வெகு திட்டமாகத் தனக்குள், பிரதிபிம்பித்துக்காட்டிநிற்பதுபோல, ஒவ்வொரு தேசத்தின்கானமும், அந்தந்தத்தேசத்தார்மனதைப் பரவசப்படுத்தி, தேடருந்திரவியக்குன்றாகியதெய்வத்தையும் தன்னிற்காட்டச் சக்தியுடையதாயிருக்கிறது.

"ஆதியிலே வார்த்தை (நாதம்) இருந்தது, அந்தவார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்தவார்த்தை (நாதம்) தேவனுயிருந்தது. ஆதியிலே அவர் தேவனோடு இருந்தார். சகலமும் அவர்மூலமாய் உண்டாயிற்று; உண்டானதொன்றும் அவரையல்லாமல் உண்டாகவில்லை. அவருக்குள் ஜீவனிருந்தது, அந்தஜீவன் மனிதருக்கு ஒளியாயிருந்தது, உலகத்திலேவந்து எந்தமனிதனையும் பிரகாசிப்பிக்கிற ஒளியே அந்த மெய்யான ஒளி. அவர் உலகத்தில் இருந்தார். உலகம் அவர்மூலமாய் உண்டாயிற்று, உலகமோ அவரை அறியவில்லை. இந்தவார்த்தை (நாதம்) மாமிசமாகிக் கிருபையினாலும் சத்தியத்தினாலும் நிறைந்தவராய் நமக்குள் வாசம்பண்ணினார்." (யோவான் 1 - 1 முதல்)

எல்லாவற்றிற்கும் ஆதிகாரணமாயிருந்தநாதத்தினால் உலகம் படிப்படியாய்ச் சூக்கும தூலதோற்றத்தையடைந்தது. தூல சூக்கும காரணமென்னு மூன்றுநிலைகளையுமடைந்த ஜீவர்களுடைய உள்ளத்திலிருந்து, அவர்கள்கருத்தைத்தெரிவிக்கச் சூக்குமமான பலபல இனிய தொனிகளும் தூலமான பலபல அபிநயங்களு முண்டாயின. கருத்தைத்தெரிவிக்கும் தொனிகளும், அபிநயங்களும், காலக்கிரமத்திற் பாஷையாகி வரிவடிவமாய் எழுதப்பட்டு, நூல்களும் சாஸ்திரங்களும் கலைகளுமாயின. தாங்கள் மிகவும் அருமையாகநினைத்தவைகளும், வாழையடிவாழையாய்வந்த பரம்பரையாருக்குப் பாடஞ்சொல்லி வைத்துவந்தவைகளுமான தெய்வதோத்திரங்களையே, முதன்முதல் எழுதிவைத்தார்கள். அதனாலேயே அதற்கு முதனூல் என்றுபெயர் உண்டாயிற்று. காதினாலேயேகேட்டுப் பாடமாக்கிக்கொண்டிருந்த காலத்தில், அதைச் சுருதி என்றார்கள். முதனூலுண்டானபின், அதன் உட்பொருளை அறிவதற்கு ஏதுவான உபாங்கங்களையும் உபநிடதங்களையும் ஆறுசாஸ்திரங்களையும் அறுபத்துநாலுகலைகளையும், அவைகளை நுட்பமாய்விளக்குவதற்கு ஏதுவாக இதிகாசங்களையும் புராணங்களையுஞ்செய்தார்கள். தெய்வபக்தர்களின் இருதயமாகிய களஞ்சியத்திலிருந்துவருஞ்செய்யுள்களில் மறைந்திருக்கும் கருத்துக்கள், உள்ளபடி அர்த்தமாவதுகூடியதல்லவே. நாதபிரம்மத்தையே கீதமாய்த் தோத்தரிக்கும்வேதம் எப்படி முக்கியமானதோ, அப்படியே நாதப்பிரம்மத்தையே விஸ்தரிக்கும் சங்கீதசாஸ்திரமாகிய காந்தர்வவேதமும் முக்கியமானது. வேதத்தின் உபாங்கமாகிய காந்தர்வவேதத்தை அல்லது

சங்கீதத்தை, கைலாயத்தில் நிருதிமூலையில் நிருத்தம் என்னும்பெயருடன் பரமசிவன் உபதேசித்ததாக இன்னும் சொல்லப்பட்டுவருகிறது. இம்முதனூலுக்குப்பின், அநேகவழிநூல்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

இதை வாசிக்குங்கனவான்களே! இற்றைக்கு அநேக ஆயிரவருஷங்களுக்குமுன்னுள்ளதாக எண்ணப்படும் முதனூலில், அதாவது சாமவேதத்தில், இன்று நாம் எல்லாவாத்தியங்களிலும் இன்னிசையுடையதென்றுமதிக்கும் வீணையும், அதன் செய்முறையும் கூறப்பட்டிருப்பதுமன்றி அதைக்கொண்டேபகவானைத்துதிக்கவேண்டுமென்றும் சொல்லியிருக்குமானால், இந்தியசங்கீதத்தின்பூர்வீகத்தை என்னென்று சொல்வது! சரஸ்வதி, நாரதர், தும்புரு, அனுமான்முதலிய பெரியோர்கள், தங்கள்தங்கள் வீணையைக்கொண்டு இடைவிடாமல் தெய்வத்தைத் துதித்துக்கொண்டிருக்கிறார்களென்றும், பரமசிவன் தமதிருகாதிலும் கம்பலர் அசுவதரர் என்னும் வைணிகசிரோமணிகளைக் குண்டலமாகத் தரித்துக்கொண்டு அவர்கள் கானத்தைச் சதா கேட்டுக்கொண்டிருக்கிறாரென்றும் சொல்லப்படுமானால், வீணாகானத்தின்மேன்மையையும், சங்கீதத்தின்பூர்வத்தையும் நிதானிக்கத்தக்கவல்லவர் யார்?

அருள்நாதன் உலகில் அவதரித்தசமயத்தில், தேவசேனைகள் வானத்தில்தோன்றி, பூமியிலுள்ளோர்கேட்கும்படி "உன்னதங்களிலிருக்கிறதேவனுக்கு மகிமையும் பூமியிலேசமாதானமும் மனுஷர்மேல் பிரியமுமுண்டாவதாக"வென்றுபாடினார்களானால், சங்கீதத்தின் உபயோகமும் உபயோகிக்கும்சமயமும் எவ்வளவுமேலானவையென்று பாருங்கள். மேலும், தேவலோகத்தில் தேவாசனத்தின்முன் சகல பரிசுத்தவான்களும் தேவதூதர்களும் தங்கள்தங்கள் சுரமண்டலங்களை வாசித்துக்கொண்டு, புதுப்பாட்டைச் சதா பாடுகிறதாகவும், "சேனைகளின்கர்த்தர் பரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர்; வானமும் பூமியும் அவருடைய மகிமையால் நிறைந்திருக்கின்றன" வென்று முழங்குகிறதாகவும் சொல்லப்படுமானால், இம்மை மறுமை என்னுமிருநிலைகளிலும் சங்கீதத்தின் முக்கியத்தை எடுத்துச்சொல்லவும்வேண்டுமோ? இம்முக்கியமான விஷயத்தில் அதாவது, சங்கீதத்தின்மேன்மையையும் அதன் பூர்வத்தையும் சொல்லவேண்டியவிஷயத்தில், தெய்வத்தின் நித்திய

காலத்தையும் பூமி உண்டானகாலமுதல் இதுவரையும் சென்றநாட்களையுமே அதற்குக் காலமாகவும் மோக்ஷப்ராப்தியையே அது தரும் மேன்மையாகவும் சொல்லக்கூடியதேயன்றி, வேறு சிறப்புச்சொல்ல இயலாத மேம்பாடுடையதாயிருக்கிறது.

மேலும், பெரியோர்களாற்சொல்லப்பட்ட பற்பலபாக்களும் பகவானைத்துதிக்கும்பாக்களும் இன்னிசைகலந்தபின்பே, மனதைப் பரவசப்படுத்தக்கூடியவைகளாயிருக்கின்றனவென்பதை நாமெல்லோரு மறிவோம். பூமியில்மறைந்துகிடக்கும் வித்துக்கள் மழையினால் முளைத்துத் தழைத்துப் பூத்துக் காய்த்து நற்பலனைத்தருவதுபோல, முன்னோர்களின்பாக்கள்யாவும், இன்னிசைகலந்தபின்பே உயர்வான அர்த்தங்களை மனதிற்குப் புலப்படுத்தி ஆனந்தமடைவிக்கின்றன.

"கல்லேனும் ஐய ஒரு காலத்தில் உருகும் என்கன்னெஞ்சம் உருகவில்லையே"
"நாடகத்தால் உன்னடியார்போல் நடித்து."

என்றபாட்டுகள் ஒரு இராகத்தில் வெவ்வேறுவிதமான ஆலாபனம் செய்யப்படும்போது அவற்றில் அடங்கியகருத்துக்கள் எத்தனையோ, அத்தனையும் மனதுக்குப்புலப்படும். அன்றியும், இன்னிசையானது மனவருத்தந்தீர்த்துச் சமாதானத்தைத்தரும்; சரீரதுன்பத்தையும் போக்கி இளைப்பாறுதலைத்தரும்; வேலையின்கஷ்டம்தோன்றாதபடி உற்சாகம்செய்துவைக்கும். இரவிற் கண்விழித்து இராட்டினம்நூற்கும் ஸ்திரீகள், தங்கள்வருத்தந்தீர இன்னிசையோடு பகவானைத்துதிக்கிறார்கள். ஏற்றமிறைக்கும் சம்சாரியும், மாவரைக்கும் ஸ்திரீயும், ஓடந்தள்ளும் ஓடக்காரனும், நாற்றுநடும்பெண்களும், சாந்து இடிக்கும் கூலிகளும், பகவானைத்துதித்துப்பாடித் தங்கள் வருத்தத்தை மறந்து, தங்கள்வாழ்நாட்களை வெகுஉல்லாசமாய்க்கழிக்கிறார்கள். கப்பரைஏந்தி யாசிக்கும் பிச்சைக்காரனும் சேமக்கலங்கொட்டி யாசிக்கும் தாதனும், உபாதானம்வாங்கும் பிரமசாரியும், அன்னம்யாசிக்கும் அன்னக்காவடிக்காரனும் எக்காலக்கண்ணி, பராபரக்கண்ணி, உடற்கூறு, நெஞ்சறிவிளக்கம் முதலிய ஞானப்பாடல்களை இனிய பண்ணோடு படித்துத் தங்கள்நாட்களைக் கழிக்கிறார்கள். தாயின் இனிய தாலாட்டுப் பாட்டைக்கேட்டுத் தூங்கும் குழந்தை இன்னுங்கேட்கவிரும்பி ஊம் கொட்டுகிறது. கன்றுக்குப் பால்கொடாத முரட்டுப்பசுக்கள் கீதாரி பாடும் இசைக்குவசப்பட்டுப் பூரணமாகப் பால்கொடுக்கின்றன. பிறர்

கண்ணுக்குப்புலப்படாமல் மறைந்துவசிக்கும் நாகப்பாம்பு, பாம்பாட்டிகள் ஊதும் மகடியின் இனியநாதத்தைக்கேட்டுத் தன்னைமறந்து ஆனந்தத்தினுற் படம்விரித்தாடுகிறது. கிதாரியின் இனிய புல்லாங்குழல் ஓசையைக்கேட்டு, மாடுகள் பின்செல்லுகின்றன. பட்டாளத்தில் வாசிக்கும் வாத்தியங்களின் ஓசையால் போர்வீரர்கள் உற்சாகமடைகிறுர்கள். குதிரைகள், வாத்தியங்களின் தாளங்களுக்கு ஏற்றவிதமாய்க் கால்கள்வைத்துநடந்து வெகுதீவிரமாய் முன்னேறிச்செல்கின்றன. இனிய ஓசையுடையபக்ஷிகள் அதிகாலையில் விழித்துப்பாடுவதையும், அதேகாலத்திற் கோவில்களிலும் ராஜ அரமனைகளிலும் சங்கீதவாத்தியங்கள்முழங்குவதையும், மணிகள் அடிப்பதையும், நாம் கேட்கிறோம். மாலையிலும் அப்படியே நாம்யாவரும் பகவானை இன்னிசையுடன் ஆராதிக்கிறோம். இப்படிப் பலவிதத்திலும் மனிதனுக்குச் சந்தோஷத்தைத்தருவதற்குச் சங்கீதத்தைவிடச்சிறந்தது வேறொன்றுமில்லை. சங்கீதமே, இவ்வுலகத்திலும் பிறஉலகத்திலும் மேன்மையுடையது. சங்கீதத்தினுல் துதிப்பதே நம்மையுண்டாக்கினகர்த்தனுக்குப் பிரியமானது. நாரதர், தும்புரு, அனுமார், இராவணன், தாவீதரசன்முதலியவர்கள் சங்கீதத்தைக்கொண்டே தெய்வத்தின்கிருபையைப் பெற்றுர்கள்.

சங்கீதமானது மனதைச் சாந்தப்படுத்தி, தெய்வத்தோடு ஒற்றுமைப்படச்செய்கிறது. சங்கீதமானது சகலநற்குணங்களையும் வளர்த்துத் தெய்வபதம்பெறச்செய்கிறது. இம்மேம்பாடுடையசங்கீதத்தை அப்பியசிக்கும்ஜனங்கள் எவர்களோ, அவர்களை அது உயர்த்தி அவர்களிருக்கும் தேசத்தை மேன்மைப்படுத்திச் சகலகலைகளிலும் செல்வத்திலும் தெய்வபக்தியிலும் விருத்தியடையச்செய்கிறது. ராஜனும் குடிகளும் சங்கீதத்தை மேலானதாகமதித்து அப்பியசிப்பார்களானுல் அவர்களைத் தேவர்களென்றும் தேவஜனங்களென்றும், அவர்கள் குடியிருக்குமிடத்தைத் தேவபூமியென்றும், மற்றவர்கள் கொண்டாடும் உன்னதநிலைக்குள்ளாகச்செய்கிறது. சங்கீதத்தைக்கொண்டு தெய்வத்தைஆராதிக்கும் உத்தமஅரசர்கள்,தெய்வபிரமாணங்கள் கடுகளவும் பிசகாமல், புலியும் பசுவும் ஒருதுறையில் தண்ணீர்குடிக்க, மன்னுயிர் யாவும் தன்னுயிராகநினைத்துப் பரிபாலனம்செய்து, 'நீதி இரக்கம் பொறுமை அன்பு சமாதானம்முதலிய உத்தமகுணங்களோடு குடிகளை

நடத்தி, இவ்வுலகத்திலேயே மோக்ஷானந்தத்தை நிலைநாட்டுவார்கள். இவ்வளவு மேம்பாடுடையசங்கீதத்தை அற்பமாகநினைத்து லௌகிக வழிகளில் உபயோகப்படுத்துகிறவர்கள் புன்னெறியடைந்து மறைந்து போவார்களென்பது நிச்சயம். தெய்வத்தைத்துதிப்பதையே முதன்மையாகக்கொண்ட நம்முன்னோர் சங்கீதசாஸ்திரத்தைப்பற்றி மிக விரிவாக எழுதியிருந்தார்களென்றாலும், எழுதப்பட்டவைகள் இக்காலத்திற் பெரும்பாலும் அழிந்தும் நூதனமானவைகளுண்டாகியும் பலதப்பறைகள் கலந்தும் இருப்பதனால், தெளிவாய் அறிந்துகொள்வதற்கு அரிதாயிருக்கிறது. சங்கீதம் உற்பத்தியானகாலம் இடம் ஆதரித்துவந்தவர்களின்பெயர்முதலியவைகளைத் திட்டமாய் அறிந்துகொள்வது இலேசானகாரியமல்ல என்றாலும், ஒருவாறு உலகத்தவர் வழக்கத்திலும் பழக்கத்திலும் முந்தியநூல்களிலும் வழங்கிவரும் சில காரியங்களைக்கொண்டு, நாமறியக்கூடிய சில ஆதாரங்களைப்பார்ப்பது, ஒருவாறுநமக்குத் திருப்தியைத்தருமென்று எண்ணுகிறேன்.

---

# சுந்தரகாண்டம் (கம்பர்.)

**"செந்தமிழ்" (தொகுதி கஉ பகுதி கூ-ல்) கூஉகூ-ம்பக்கத் தொடர்ச்சி.**

இறந்தனர்பிறந்தபயனெய்தினர்கொலென்கோ
மறந்தனரறிந்துணர்வுவந்தனர்கொலென்கோ
துறந்தவுயிர்வந்திடைதொடர்ந்ததுகொலென்கோ
திறந்தெரிவதென்னைகொலிநன்னுதலிசெய்கை.

சுந்தரகாண்டம், உருக்காட்டுபடலம்-செய்-கூச.

"அது வாணுதலிகண்டாள்" என்றுசொன்னபின் அந்தச்சேதனனுக்குண்டானபரவசத்தைவெளிப்படுத்தவிரும்பிப் பின்வரும் இரண்டு செய்யுள்களின்மூலம் பலவிததிருஷ்டாந்தங்களுடன் உபபாதிக்கிறார்.

(இதுவும் உபதேசானந்தரம்.) இந்நன்னுதலிசெய்கை-இந்தத்திவ்விய முகமலர்ச்சியையுடையசேதனனுக்கு ஜாயமானகடாக்ஷத்தாலுண்டான ஆனந்தானுபவத்தை; (எவ்வனுபவத்துக்கீடாகச்சொல்லுதல் கூடுமென்று ஆராய்ந்தால்) இறந்தனர் - ஜீவாத்மா சம்சாரபந்தத்திலகப்பட்டு இந்திரியங்களாற்கட்டுண்டு பூர்வஞானமேமேலிடாது

அஞ்ஞானமான அந்தகாரத்திலகப்பட்டுழன்று ஜென்மமெடுத்தும் ஜென்மசாபல்யமானகிருத்தியங்கள் யாதொன்றுஞ்செய்யாமல், திருவடிகளை அடையவேண்டியகருமங்களிலிருந்தும்விலகி ஜீவப்பிரேதம் போலிருக்கும் பயனற்றஜீவனென்று; பிறந்த பயனெய்தினர் கொலென்கோ - திடீரென்று ஒருகாரணவிசேஷத்தாலே உலகிற் பிறந்து அடையவேண்டியபுருஷார்த்தங்களை அடைந்தால் அந்த ஜீவனுக்கு எவ்வளவு ஆனந்தமுண்டாகுமோ அவ்வளவுசந்தோஷம் உண்டாயிற்றென்றுசொல்லுதல்கூடுமோ ; (அல்லது) அறிந்து - சத் சம்பிரதாயமார்க்கத்தையனுஷ்டித்துவந்து, பகவத்சரணாரவிந்தங்களி லீடுபட்டிருந்துவந்து ; (இப்பால்) மறந்தனர் - ஜென்மாந்தரவாசனையையும், பகவானுடையசரணாரவிந்தங்களின்வைபவத்தையும் ஒரு காலவிசேஷத்தில் மாயையினால் அடியோடுமறந்திருந்த ஒருஜீவன்; உணர்வுவந்தனர்கொலென்கோ - மறுபடியும் குருமுகமாகப் பூர் வானுஷ்டானத்தையும் தன் நிலைமையையும் திடீரென்றறிந்து உஜ்ஜீவிக்கும்படியான ஒருஹேதுநேர்ந்தால் அப்போது என்ன குதூகலமுண்டாகுமோ அதற்குச்சமமாகச்சொல்லலாமோ;(அல்லது) துறந்த உயிர்-போனபிராணன்; வந்து இடைதொடர்ந்ததுகொலென்கோ-மறுபடியும் உடலுட்புகுந்து உடலும் உயிரும் கூடிற்றென்றால் எவ்வளவுஆனந்தமுண்டோ அவ்வளவு ஆனந்தத்தை இந்தச்சேதனன் அடைந்தானென்றுதான் சொல்லலாமோ ; (செய்கை) திறந்தெரிவது என்னைகொல் - அந்த ஆத்மானந்தத்தின் அளவையும் பெருமையையும் வன்மையையும் என்னவென்றெடுத்துரைப்பது.

இழந்தமணிபுற்றரவெதிர்ந்ததெனலானாள்
பழந்தனமிழந்தனபடைத்தவரையொத்தாள்
குழந்தையையுயிர்த்தமலடிக்குவமைகொண்டாள்
உழந்துவிழிபெற்றதொருயிர்ப்பொறையுமொத்தாள்.

சுந்தரகாண்டம், உருக்காட்டுபடலம். செய் - ௬௫.

(தவிரவும்,) புற்றரவு - இந்தச் சம்சாரமண்டலத்திற் சரீரத்திலகப்பட்டு வாசஞ்செய்யும் ஜீவாத்மா; இழந்தமணி - (தான் அயர்வுற்றிருந்தபோது, அதாவது தான் மாயையினால் மயக்குற்று மெய்ம்மறந்து புத்திஸ்திரமில்லாமற் சஞ்சலமடைந்திருந்தகாலத்தில்) தன்னை

விட்டகன்ற தன்னுடைய உயர்ந்த ரத்தினசமானமான அழுக்கற்ற நல்லறிவை; எதிர்ந்தெனலானுள் - மறுபடியும் அடைந்தால், அந்தச் சேதனனுக்கு அப்போதுண்டாகும் களிப்பை ஒக்கும்; (அல்லது) இழந்தன - தானே தன்னுடைய கர்ம்மானுஷ்டானங்களினுலும், அவிவேகத்தினுலும், சுயேச்சையினுலான கிருத்தியங்களினுலும் இழந்தமோக்ஷத்தை; பழந்தனம் - மிகப்பழமையாயும், அநாதிபூர்வகமாயும், அநாதிகாலங்களாகத் தன்னைக்காப்பாற்றுவதற்கு ஹேதுவாயுமுள்ள ஒரு சாரமான மூலமந்திரமானதும், பூமியிலுள்ள மனோரதங்களையும் சுவர்க்கபோகங்களையும் முக்தியையும் சாதித்துக்கொள்வதற்கு ஆதாரமானதுமான ஒப்பற்றபொருளை ; படைத்தவரையொத்தாள் - மீண்டும் புதையல்கண்டெடுத்தாற்போல் அதிகவியப்புடன் புதிதாகக் கிட்டினதுபோலடைந்தால் அப்போது சேதனனுக்குண்டாகும் ஆனந்தத்திற்கு ஒப்பாகுமென்றுசொல்லற்பாலதாம்; (அல்லது) குழந்தையை - தென்புலத்தாரைத் தான் பருவகாலங்களிற்கொடுக்கும் நன்னீர்முதலாயுள்ள கருமங்கள்யாவும் வேதவிதிப்படிசெய்வதாற் கரையேற்றுந்தன்மையுடைய ஆண் குழந்தையை ; (இனி, உள்ளுறை) ஜீவாத்மா எத்தனையோகோடி ஜென்மமெடுத்துழலும்போது "பூதமைந்தும்,விலங்கியவிகாரப்பாட்டின்வேறுபாடுற்றவீக்கம், கலங்குவது" என்பதற்கிணங்க அந்தவீக்கமாகிய பிறப்பின்மிகுதியற்று மறுபிறப்பில்லாமல் உய்யும்படிக்கான ஓர் உபாயத்தை ; (திவ்விய அஷ்டாக்ஷரமந்திர அனுக்கிரகத்தை) உயிர்த்த - நூதனமாக எதிர்பாராது அடைந்த; மலடிக்குவமைகொண்டாள் - நெடுநாளாகக்காத்திருந்தும் பிரயத்னப்பட்டும் கிட்டாமல் இனிக் கிடைப்பதரிதென்று மனங்கலங்கிச் சோர்வும் ஏக்கமுமுற்றிருக்கும் ஒரு ஜீவாத்மாவுக்கு அப்போதுண்டாகும் பரவசத்தை நிகர்க்குமென்றுசொல்லலாம்; (அல்லது) உழந்து - அஞ்ஞானமிகுதியால் தன்னுடையஞானக்கண் ணடைக்கப்பட்டு அதனுல், தெளிவானநடையற்று நன்னெறிவிட்டுவிலகி உழல்கின்றபோது ; விழிபெற்றது - சன்மார்க்கமும் மோக்ஷஹேதுவுமான நன்னெறியை ஊட்டும்படிக்குள்ள ஓர் உபாயத்தையடைந்த ; ஓர் உயிர்ப்பொறையும் ஒத்தாள் - ஒரு ஜீவாத்மா அல்லது ஒருசேதனனுக்குள்ளதுபோல் ஆயிற்று.

ஆகவே, இந்த இரண்டுசெய்யுள்களாலும் அனுமான் சீதாப் பிராட்டிக்குக் கணையாழியைக்காட்டினவுடன் அவள் மிகக்களிப்புற்று ளென்பது சாமான்யக்கருத்தாயினும் விசேஷார்த்தமாகத் திருவஷ்டாக்ஷரவுபதேசபூர்வகமாகச் சேதனனுக்குண்டாகும் ஆத்மானந்தவைபவத்தைப் பூர்வாசாரியர்களாற் பலவிததிருஷ்டாந்தங்களுடன் விரித்தெழுதப்பெற்றதற்கிணங்க இவ்விடத்திலும் கூறப்பட்டதுபோலும்.

இனிப் பின்வரும் இரண்டுசெய்யுள்களால், திருமூலமந்திரத்தை உபதேசம்பெற்றபின் அந்தச்சேதனன் அதைக்கொண்டாடியனுபவித்தவிதத்தை விரித்துக்காட்டுகிறார்.

(இன்னும்வரும்)

எம். எஸ். சேஷையங்கார்.

---

௨

# இலங்கைமஹாவம்சமும், தென்னிந்திய சரித்திரவாராய்ச்சியும்.

———:(o):———

தென்னிந்தியசரித்திரவாராய்ச்சிக்கு மிகவும்வேண்டுவதானசாதனங்களில் இலங்கைமஹாவம்சம் என்பது மிகவுஞ்சிறந்தது. இது மகதபிராகிருதபாஷையாகிய பாளிபாஷையில் யாத்தகாவியம். இக்காப்பியத்துக்குப் பழையபதிப்புக்கள் இருந்தபோதிலும் சின்னாட்குமுன் கைகர் (Geiger) ஆசிரியரால்வெளிப்படுத்தப்பட்ட பதிப்பும் மொழிபெயர்ப்பும் சரித்திரஆராய்ச்சிக்கு அரும்பெரும்பற்றுக்கோடாகநிலைபெறும். இம்மஹாவம்சம் தென்னிந்தியசரித்திரத்தோடு எங்கெங்குக் கலக்கிறதோ அவைகளையெல்லாம் ஒருங்குசேர்த்து ராயல்ஏஷியாட்டிக்ஸொஸைடிப்பத்திரிகையில் ஹுல்ஷ்ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். ஆனால் இவர் ஆராய்ச்சி தென்னிந்தியசரித்திரத்துக்குச் சாஸனஆதாரங்கள் எவ்வளவுவரைக்குங்கிடைக்குமோ அவ்வளவுவரைக்குந்தான் செல்வதாயிருக்கின்றது. ஏனெனில் இச்சாஸனஆராய்ச்சியில் இவர்

மிகவும் உழைத்து அக்காலத்துச்சரித்திரத்தை ஒருவாறு சீர்ப்படுத்தியவர். ஆனால் இச்சாஸனங்களுக்குமுந்தியகாலத்தியவிஷயம் நமக்குத் தெரிய அகப்படுஞ்சாதனம் தமிழ்க்காப்பியங்களேதவிர வேறில்லை. இக்காலத்தியசரித்திரத்துக்குத்தான் மஹாவம்சம் அரும்பெருஞ் சாதனமாய்க்கிடக்கிறது. இக்காலத்தியசரித்திரம் சிறிது ஆராய்ச்சி பெற்றதேயாயினும், இவ்வாராய்ச்சி முடிவுபெற்றதாகச்சொல்லவியலாது. இவ்வாராய்ச்சிக்குக் கைகரவர்கள்மொழிபெயர்ப்பும், டாக்டர் ப்ளீட்முதலானவர்களுடைய பரிசோதனையுமே தகுந்தபற்றுக்கோடாகும்.

இம்மஹாவம்சமென்னுங்கிரந்தம் சாஸனகாலத்துக்குமுற்பட்டே நின்றுவிடுகின்றது. இக்காலத்தியநிலைமையைப்பற்றியவிசாரணையிற்றான் பல மாறானகொள்கைகள் நடைபெறுகின்றன. இக்காலத்திய ஆராய்ச்சியிற்றான் மிகுந்ததேர்ச்சியும் ஊக்கமும் இன்றியமையாதனவாயிருக்கின்றன. இத்தகையவாராய்ச்சி டாக்டர் கைகரவர்களின்பெருமுயற்சியாலன்றிச் சாத்தியமாகாது. (இவர்மொழிபெயர்ப்பு ஆராய்ச்சிகளினின்றும் தென்னிந்தியசரித்திரசம்பந்தமானசெய்திகளையெடுத்துத் தொகுக்குமுன், இவர் ஆராய்ச்சிக்கொள்கைகளை ஆங்கிலம், ஜர்மன் பாஷைகள்பயின்று தெரிந்துகொள்ள அவகாசமில்லாதவர்களுக்குத் தெரியப்புகட்டுவது உபயோகமாயிருப்பதுந்தவிரத் தமிழ்ப்பாஷைக்கும் தமிழர்சரித்திரத்துக்கும் முக்கியமாய்க்கருதப்படும் அநேகவிஷயங்கள் இவ் விலங்கைக்காலஅட்டவணைகளின் உண்மை, அண்மைத்தன்மையைப்பொறுத்ததாயுமிருக்கிறது.)

மஹாவம்சவிஷயத்தில் இலக்கியசம்பந்தமானகேள்விகளை இச்சமயம்நீக்கி, இச்சரித்திரக்கிரந்தத்துக்குமுதனூல்கள் எவை என்றும், எங்கிருந்து விஷயங்கள் சேகரிக்கப்பட்டனவென்றும் வம்சட்டப்பகாசினியினின்றும் தெரிந்துகொள்ள இயலும். இவ்வம்சட்டப்பகாசினி என்பது மஹாவம்சத்தின்வியாக்கியானம். ஆக்கியோர்பெயர் அகப்படவில்லை. இம்மஹாவம்சமோவென்றால், தீபவம்சத்தின்தீபிகையென்பர். இது சூளவம்சத்திய (38-59) வாக்கியத்தால் நன்குவிளங்கும்.

"දත්වා සහස්සං දීපෙතුං දීපවංසං සමාදිසි"

"Datva Sahassam dipetum Dipavamsam Samadisi."

(இ - ள்) தாதுசேனமஹாராஜா ஆயிரம்பொன்னைக்கொடுத்து, தீபவம்சத்துக்குத் தீபிகையெழுத உத்தரவுகொடுத்தாரென்பதாம். இதனால், பூர்விகமஹாவம்சமென்று மஹாவம்சத்தின்முகவுரையிற்சொல்லப்படுவது தீபவம்சமேயென்று ஊகிக்க இடமுண்டு. இவ்விரண்டில் முற்பட்டதாய தீபவம்சம் கி. பி. நான்காம்நூற்றூண்டின்முடிவில் இயற்றப்பட்டபோது இலங்கைத்தீவிற் புராதனந்தொடங்கி அக்காலம்வரைக்கும்அத்தீவின்சரித்திரமடங்கிய ஒருவித இதிஹாஸம் இருந்ததாகத் தெரியவருகிறது. இப் பழைய இதிஹாஸம், புத்தகோஷர் தம்தெளிவானகிரந்தங்களுக்கு முதனூலாயங்கிகரித்த பௌத்தமதக்கிரந்தங்களின்வியாக்கியானகிரந்தங்களான அட்டகதையின் (அர்த்தகதையின்) ஒருபாகமாயிருந்தது. அர்த்தகதையைப்போலவே இதுவும் ஸிம்ஹளவசனநடையில் எழுதப்பெற்றிருந்ததோடு, சிறுபாகம் பாளிக்கண்ணிகளோடும் கலந்திருந்திருத்தல்கூடுமென்று தோன்றுகிறது.

இந்த அர்த்தகதாமஹாவம்சமானது, சாதாரணமாய் அர்த்தகதையைப்போலவே அத்தீவிலுள்ள ஒவ்வொருமடத்திலும் வெவ்வேறுனமூலபாடங்களையுடையதாய் நிலைபெற்றுநின்றது. ஆனால் இப்பாடபேதங்கள் சிலவே. இவைகளில் அநுராதபுரத்திலிருந்த மஹாவிஹாரமென்னும் மடத்தின்மூலபாடம் மிகவும் முக்கியமானது. ஏனெனில் இதுதான் மஹாவம்சடீகையெழுதினவருக்கு முதனூலாய் நின்றது.

இவ்விதிஹாஸமானது இலங்கைக்கு மாஹிந்தர்வந்தசெய்தியை ஆதியாகக்கொண்டு கி.பி. நான்காம்நூற்றூண்டின்முதற்பாகத்திலாண்ட மஹாசேனமஹாராஜாவின் ஆட்சிபரியந்தம்வந்து முடிவுபெற்றிருத்தல் வேண்டும். ஏனென்றால், மஹாவம்சமும், தீபவம்சமும் அம்மஹாசேனருடைய ஆட்சிவரைக்குமே கூறுவனவாதலின்.

இவ்விரண்டில், தீபவம்சம் பாளிபாஷையில், திருத்தக்குறைவாய் யாத்த முதற்பாடமாய்த் தென்படுகிறது. மஹாவம்சமோவென்றால், அதேவிஷயத்தைப் புதுமாதிரியா யெடுத்தாளப்பெற்றதாயிருப்பதோடு பாளிபாஷையையுபயோகிப்பதில், தேர்ச்சியையும், கவிசாதுர்யத்தையும் முதனூலிலடங்கியவிஷயங்களை எடுத்தாளுவதில் விரிவையும் பொருந்தியதாயிருக்கிறது. இதையாக்கியோர்பெயர் மஹாநாமன் என்று தெரிகிறது.

புத்தகோஷர் என்பவர் ஸமந்தபாஸாதிகையின்சரித்திரமுகவுரையில்,தீபவம்சத்தையே யனுஸரித்தவராய், வேறொன்றுமூலமானஅர்த்தகதையைக்கொண்டே, இத்தீபவம்சத்திலடங்கிக்கிடந்தவிஷயங்களைப் பூர்த்திசெய்தும் விஸ்தரித்தும் உரைப்பவராவார்.

மஹாவம்சடீகையோவென்றால், மஹாவம்சத்திலும், தீபவம்சத்திலும் அடங்கியவிஷயங்களை அர்த்தகதையென்னும் முதனூலினின்று பெருகச்செய்வதாயிருக்கிறதுந்தவிர, கி. பி. 1000-த்திலிருந்து 1250-க்குள்ளடங்கியகாலத்திற்குமுன் யாக்கப்படாததாயுமிருக்கிறது. இந்த டீகையினின்றும் அதை ஆக்கியோர் அர்த்தகதையைத் தன்முன் வைத்துக்கொண்டே யெழுதினவரென்றும், அந்தடீகையை வாசிப்போர்களுக்கெல்லாம் அர்த்தகதை தெரிந்திருத்தல்கூடுமென்றும் உறுதியாய்ச்சொல்ல இடமுண்டு.

இம்மேற்கூற்றால், இக்கிரந்தங்களுக்கெல்லாம் முதனூல் ஒன்றேயென்றும், இவை வெவ்வேறுகாலங்களில் வெவ்வேறுஆசிரியர்களாற் கீழ்வருங்கிரமப்படியாக்கப்பட்டனவென்றுந் தெளிவாய்க்கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| தீபவம்சம் | கி. பி. | நான்காம்நூற்றாண்டு |
| ஸமந்தபாஸாதிகா | ,, | ஐந்தாம் ,, |
| மஹாவம்சம் | ,, | ஆறாம் ,, |
| மஹாவம்சடீகை | ,, | பத்து அல்லது பன்னிரண்டாம் நூற்றாண்டு. |

இவ்விதிஹாஸங்கள் நம்பக்கூடியசெய்திகளைச்சொல்லுவனவேயென்னும்விஷயத்தில் ஸக்கர்ஆசிரியர், ஓ.ப்.ராங்க்,கொன், வி.எ.ஸிமித் என்பவர்களுக்கெதிரிட்டவராயும், ஹெச். ஓி. நார்மன் என்பவராற் சிறிதும், ரைஸ். டேவிட்ஸ் என்பவரால் முழுதும் அங்கீகரிக்கப்பட்டவராயும் நிற்பர். பௌத்தகர்ணபரம்பரையைவிளக்குவதில் இவ்வாசிரியர் விண்டிஷ் என்பவரோடு ஒன்றுபட்டவராய், கழுநீர்வடிக்கும்முயற்சியில் அரிசியைப்போகவிடாமற்காப்பதுபோலக் கற்பனைகளைக்களைந்து எஞ்சியதை ஆராயயத்தனிப்பர். இவ்விஷயத்திற் செய்யவேண்டிய முயற்சியென்னவென்றால், கர்ணபரம்பரையாய்வருங்கதைகள்,தம்முள் அடங்கிக்கிடப்பனவும், வெளியினின்றுகிடைப்பனவுமான பலசான்றுகளால் எவ்வளவுதூரம் நம்பத்தக்கதாகநிலைபெறும் என்றும், எவ்விஷயங்களில் நம்பவொண்ணுவென்றும் ஆராய்ந்துதெரிந்துகொள்வதுதான்.

இவ்விதிஹாஸங்களிலடங்கிக்கிடக்கும் பலசான்றுகளை முதலி லாராய்வோமேயானு் லிவைகள் உண்மையையேயெழுதப்புகுந்தவைக ளென்னுங்கொள்கை ஐயமின்றி அங்கீகரிக்கத்தக்கதாகத்தோன்றும். ஆனுல் இவைகளை எழுதிவிடுத்தநல்லோர்கள் தங்கள்காலத்துள்ளோரும் தங்களினத்தாரும் அங்கீகரித்தகொள்கைகளை யனுஸரிப்பவராயும், ஒரு சார்பான புராதனவழியிலேயே தங்கள்கேள்விக்குட்பட்ட விஷயங்களைப் பரிசோதிப்பவராயும் இருந்தவர்களேதவிர, தங்களிடம் கேட்போர் களையாவது, தங்கள்காப்பியங்களைப் படிப்போர்களையாவது மோசஞ் செய்யவேண்டுமென்றுகருதியோரல்லர். இந்நிலைமை இலங்கை ஆரிய வம்ச அரசருக்கு ஜன்மசத்துருக்களைப்பற்றிக்கூறும் பற்றற்றகூற்றுக் களினின்று நன்குவிளங்கும். இது நன்குய்க்கவனிக்கவேண்டியவிஷயம். சோழதேசத்திய இளராஜனைப்போல் உயர்ந்தோங்கிய அரும்பெருமாக் களைப்பற்றிமாத்திரம் இத்தகைய அபிப்பிராயங் குறிக்கப்படவில்லை. அரசுரிமையையபகரித்த சேனகுடிகள்விஷயத்திலுங்கூட 'ரஜ்ஜம்தம் மேனகராயும்'என்று தீபவம்ச, மஹாவம்சங்களிற் சொல்லக்கிடக்கிறது. (18.47;21.11)"தவிர, முதல்முதல் காலக்கிரமத்தை ஒழுங்குபடுத்தும் வெளிப்படையான யத்னம்ஒன்றே நம்பிக்கையையுண்டுபண்ணத்தக்க தாயிருக்கிறது. மதஸம்பந்தமான கர்ணபரம்பரைக்கும் லௌகிகசரித் திரத்துக்கும், இந்தியசரித்திரத்துக்கும் இலங்கைச்சரித்திரத்துக்கும் உள்ள காலஒற்றுமைகளையேபுகட்டுவதான அநேகபாகங்கள் தீபவம் சத்திற் காணக்கிடைக்கின்றன." இக்கூற்று கைகர்ஆசிரியர்வார்த்தை களாலேயே இவ்விதிஹாஸங்களிலடங்கியசான்றுகளால் அவர்க்கு இவ் விதிஹாஸங்களிலுண்டான சரித்திரஸம்பந்தமானமதிப்பை நன்குபுலப் படுத்தும்.

இலங்கைப்புராதனசரிதத்தை ஸ்தாபிக்கும் மேற்குறித்த இரண்டு சான்றுகளிற் புறச்சான்று சிறந்தது. இந்தியதேசத்து ராஜவம்சாவளி களில் அசோகமஹாராஜருக்குமுந்தியவர்கள்விஷயத்தில் மஹாவம்சத் தின்பரம்பரைக்கதைகள் பிராம்மணபரம்பரைக்குப் பொருத்தமுள்ள வைகளாயிருக்கின்றன. பௌத்தபரம்பரைப்பிரகாரம் புத்தருக்குச் சமகாலத்தவரான பிம்பிஸார,அஜாதசத்துருவென்பவர்கள் ப்ராஹ்மண பரம்பரையிலும் அங்கீகரிக்கப்பட்டவர்களேயாவர். நந்தர்கள், சந்திர குப்தன், பிந்துஸாரன் இவர்கள் வாஸ்தவமாய்வதிந்தவர்கள் என்பதற்கு

ஐயமேயில்லை. இவர்கள்சரிதம் இரண்டுபரம்பரையிலும் ஒருவாறாகவே நிலைபெறும். சந்திரகுப்தனுக்கு அமைச்சராய்விளங்கிய சாணக்கியன் என்னும் அந்தணன்பெயர் இவ்விதிஹாஸங்களிலும் காணக்கிடைக்கிறது. பிந்துஸாரன், அசோகன் இவ்விருவராண்டகாலவளவில்மாத்திரம் இவைகள் கொஞ்சம் வேறுபடுவனவாய்த்தோன்றும். இக்காலத்திய இந்துசரித்திரவிஷயத்தில் இலங்கைப்பரம்பரைக்கதைகள் ஜைன இதிஹாஸங்களினின்றும் சிறிதுமாறுபடுவனவாயினும் ப்ராஹ்மணபுராணங்களோடு ஒப்பனவாயிருக்கின்றன.

தீபவம்சமும், மஹாவம்சமும், அத்தேசத்தில்வழங்கிவரும் கர்ணபரம்பரைக்கதைகளும், இலங்காதீபத்தைப் பௌத்தமதத்துக்காட்படுத்தியவர்கள் அசோகமஹாராஜாவின்மக்களான மாஹிந்த, ஸங்கமித்தாளன்பவர்கள்தான் என்னும்விஷயத்தில்ஒருமைப்பட்டவைகளாயிருக்கின்றன. அசோகசாஸனங்களில் இரண்டு பதின்மூன்றும்பாறைச்சாஸனங்கள் இலங்கையைக்குறிப்பிடும். இவ்விரண்டில் முதலது மனிதர் விலங்குகளென் றிருபாற்பட்டஜந்துக்களுக்கும் உபகாரமாய் மருந்துகளையளிக்குஞ்சந்தர்ப்பத்திலும், இரண்டாவது அன்னியதேசங்களுக்கு மதபோதகர்களையனுப்பியசந்தர்ப்பத்திலும் பிறதேயங்களோடு இலங்கையையுங்குறிக்கும். இவ்விரண்டுகுறிப்பிலும் இலங்கை பௌத்தமதத்தையங்கீகரித்தவிஷயத்தைப் புலப்படுத்தவில்லை. இவ்விரண்டுசாஸனங்களும் அசோகமஹாராஜாவின் பதின்மூன்றும்வருஷத்தன. இலங்கையிற் பௌத்தமதம்நிலைகொண்டது இம்மஹாராஜாவின் பதினெட்டாம்வருஷம் என்ப. இதிற் சிறிதுபிழையிருப்பதுபோல் தோன்றுமென்றும், இலங்கை தன் யத்னத்தால் பௌத்தசார்பான விஷயம் உண்மையாயிருப்பின் இவ்வாறான சிறந்தவிஷயத்தைத் தெரிவியாமலிரார் என்றும், இப்படித் தன்சாஸனங்களில் வெளிப்படையாய்க் கூறாமலிருப்பதால் இச்செய்தி நம்பத்தக்கதல்லவென்றும் கொள்வர் வி. ஏ. ஸ்மித் என்பவர். இத்தகையகொள்கைக்கு ஸங்கமித்தா என்னும் பெயரே ஒருசான்றாகும் என்றும் சொல்வர்.

இப்பெயர்விஷயத்தில் அசாதாரணமானசந்தர்ப்பம் ஒன்றும் இல்லை. இயற்பெயரைநீக்கிப் பட்டப்பெயர் ஒன்றைப்பெற்றுவழங்குவது, இப்பழையகாலத்தில்மாத்திரமன்றி இன்னும் அண்மைத்தாய்ச் சிலாசாஸனங்கள்நிரம்பக்கிடைக்குங்காலத்திலும் சாதாரணவழக்காய் நின்றிருக்கிறது. இது கி. பி. பத்துமுதல் பதின்மூன்றும்நூற்றாண்டு வரைக்கும் உயர்ந்தோங்கிய சோழவம்சத்தரசர்கள்விஷயத்திலும்

அவர்கள்மஹாதேவியார்பெயர்களிலும் ஏராளமாய்க்காணலாம். இவ்விருவர்பெயர்களையும் அசோகமஹாராஜாசாஸனங்களில் வரைந்திருத்தல்வேண்டும் என்பதற்குக் காரணம் நன்குவிளங்கவில்லை. முற்குறித்த இரண்டுசாஸனங்களும் இலங்கையின்மதவேறுபாட்டுக்குமுந்தியவை. இத்தகைக்குறிப்புக்கு இயன்ற மற்றொருசாஸனமோவென்றால் ப்ளீட் கொள்கைக்கேற்ப பௌ. பி. 256-ம்வருஷத்ததென்றால் இலங்கைமத மாறுபாட்டுக் கிருபதுவருஷத்துக்குப்பிற்காலத்ததாம். ஆகையால் இச்செய்தியைக் குறிப்பிட்டுச்சொல்லவேண்டியநிர்ப்பந்தத்திற்குக் காரணமில்லை. இஃ தெற்றேயாயினும், இத்தகையதவறுதல், நிர்ணயமானமுடிவுகளை அநுமானித்துத்துணியவேண்டியவளவு ஐயமற்றசான்றாகாது.

தம்பபன்னியென்பது இலங்கையே, அதற்கெதிர்த்தகடற்கரைத் தேயமன்றென்பது நிச்சயமாயின் முற்பட்டசாஸனங்களினின்றும் நாம் கொள்ளக்கூடியதுணிபு, மாஹிந்தன் இலங்கைக்குவருவதற்குமுன்னரே இந்தியகண்டத்துக்கும் இலங்கைத்தீவுக்கும் போக்குவரத்துண்டென்பதும், அம்மூலமாய்ப் பௌத்தமதத்தை இலங்கைத்தீவிற் பரவச் செய்யவேண்டியயத்னங்கள் சில செய்யப்பெற்றனவென்பதுந்தான். இக்கொள்கைக்காதாரம் மஹாவம்ச தீபவம்சங்களிலேயேகிடைக்கும். இவைகள் "அசோகமஹாராஜா தேவானும்பியதிஸ்ஸனுடைய இரண்டாம் அபிஷேகத்துக்காகத் தானனுப்பவேண்டிய ஸன்மானங்களையனுப்பி, பௌத்தமதத்தைக் கைவிடாமற்கொண்டுநடத்தவேண்டுமென்று உபதேசித்தார்" என்றுசொல்லும். இலங்கையிதிஹாஸங்களில் வரைந்துள்ள பௌத்தசமயப்பிரசாரககுழுக்களின்சரித்திரமானது, பில்ஸாஸ்தூபங்களிலிருந்துகிடைத்த கல்வெட்டுக்களினூற் சிலமுக்கியமான விவரங்களில் ஸ்தாபனையடைகிறது. தவிர, உருவேலகானனத்தினின்றும் பெயர்த்தனுப்பப்பட்ட போதிமரயாத்திரைச்செய்திக்குச் சிறிதும் தவறுசொல்லவொண்ணாத சிற்பச்சான்று முற்கூறியஸ்தூபத்திலேயே காணக்கிடைக்கிறது.

இவ்விதிஹாஸங்களையாக்கியோர் தங்கள்சமயக்கொள்கைகள் நிலைபெற்றுவிளங்க எவ்வாறான அற்புதச்செய்திகளைக் கற்பித்துச்சொல்லவேண்டியதென்றவர்கள்புத்திக்குத்தோன்றியதோ அவ்வாறானகற்பனைக்கதைகளை யாங்காங்குக்கலந்தவரேயாயினும், மொத்தத்தில் தாங்களுண்மையென்றுநம்பியவிஷயங்களையேசொல்லமுயன்றவரென்பதற்கு உறுதியானஆதாரங்கள் மேற்கூறியதினின்று நன்குவிளங்கும். இவர்கள்சொல்லுஞ் செய்திகள்விஷயத்தில் இக்கொள்கைக்கதிகாரமுண்டேயாயின், இதன்பின் செய்யவேண்டியஆராய்ச்சி இவ்விதிஹாஸங்களின்காலவரையறை யெத்தகைத்தென்பதேயாம்.

(தொடரும்.)

எஸ். கிருஷ்ணஸ்வாமிஐயங்கார், எம். ஏ.

ஸ்ரீ:

# மணிப்ரவாளம்.*

தென்மொழியுமாரியமுஞ்சேர்ந்தமணிபவள
மென்மொழியின்றன்மையியம்பற்குத்—தொன்மை
யிருமொழியி ஞரணமுமேத்தமெழிலெம்மான்
றிருமகள்கோன்றுளே நெஞ்சேசேர்.

கல்விகேள்விகளால்நிரம்பியபெரியோர்பலர்கூடிய இந்தச்சபை யில் சிற்றறிவுடைய சிறியேனுக்கு வாய்திறத்தற்கேற்றநிறமை சிறிது மில்லையென்பது திண்ணமே. ஆயினும், தமிழுலகுக்குப் பரமோபகாரி யாகிய மஹாமஹோபாத்யாய பிரமஸ்ரீ சாமிநாத ஐய்ரவர்கள் இந்தச் சபையில் 'மணிப்ரவாளநடை' என்பதைப்பற்றி ஒருபந்யாஸஞ் செய்யவேண்டுமென்று எனக்குக் கட்டளையிட்டதனுல், அப்பெரியாரது வாக்கை மறுத்தற்கஞ்சி அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு, சிறிய இந்த உபந்யாஸத்தை எழுதுவதற்குத் துணிந்தேன். இந்த உபந் யாஸத்திற் காணப்படுங் குறைகளை அறிஞராயினுர் தமது இயற்கை நற்குணத்தாற்பொறுத்து, ஏதேனுங் குணமிருப்பின் அதனைமாத்திரம் ஏற்றுக்கொண்டு, எளியேனுக்குக் கல்வியில் மேன்மேலும் ஊக்கத்தை யுண்டாக்குமாறு அவ்வறிஞரைப் பணிந்து கேட்டுக்கொள்கின்றேன்.

இப்போது, முதலில் மணிப்ரவாளமென்றபெயர்க்குப் பொரு ளென்னவென்று ஆராய்வோம். இதற்கு ஒருசாரார் பொருள்கூறு மாறு:—மணியென்ற பொதுப்பெயர் இங்குச் சிறப்பாய் மாணிக்கத் தையும் ப்ரவாளமென்பது பவழத்தையுங் காட்டும். ஆகவே, மணியும் பவழமும் என்ற இரண்டையுஞ்சேர்த்து ஒருகோவையாகக் கோக்கப் பட்ட ஹாரத்தில், அவ்விரண்டும் நவமணிவகையிற்சேர்ந்து செந்நிற முடையனவாதலின் சேய்மைநோக்கில் ஒற்றுமைப்பட்டிருந்தும் நெருங்கிநோக்குமிடத்து வேறுபாடுகாட்டுதல்போல, தென்மொழியும் வடமொழியுஞ்சேர்த்துப்ரயோகிக்கப்படும்பொழுது அவை தெய்விக பாஷைகளாய் ஒத்தசிறப்பினவாதல்பற்றி ஸ்தூலமாகப்பார்க்குமிடத்து ஒற்றுமைப்பட்டனபோலத்தோன்றினும், ஊன்றிப்பார்க்குமிடத்து வேறுபட்டுத்தோன்றுந்தன்மையனவாதலின், அவ்விருமொழியும் விரவியநடை மணிப்ரவாளநடையெனப்பட்டது.

---

*இது மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பதின்மூன்றும்வருஷக்கூட்டத்தில் வாசிக்கப்பெற்றது.

இனி, மற்றொருசாரார் இத்தொடர்க்குப் பொருள்கூறுமாறு:— மணியென்பது முத்தையும் பவளமென்பது பவழத்தையும் புலப்படுத்தும்: புலப்படுத்தவே, முத்தும் பவழமும் விரவக்கோத்தஹாரம் வர்ணத்தின்வேறுபாட்டால் நிறப்பொலிவுபெற்றுக் காட்சிக்கின்பம்பயத்தல் போல, வடமொழியுந்தென்மொழியுங்கலந்த இந்நடையும் செவிப்புலத்திற்கின்பம்பயத்தலால் இப்பெயர்பெற்றதென்பது. "முத்துக்களாலு மிஹநற்பவழங்களாலு, மொத்துக்கலந்ததமிழாலபிஸம்ஸ்க்ருதேந- எத்திக்கிலும்ஸவதுஹாரலதேவஸஜா, புத்திக்குமத்க்ருதிரியம்க்ருதிநாம் விஸ-ஷா" என்றது காண்க.

இனி, வேறொருசாரார், "மணியெனும்பேர்நீலமாமணியின் பேரே"என்ப வாதலாலும், மணிவண்ணன் மணிகண்டன் முதலிய இடங்களில் அடைமொழியின்றிக்கூறுமிடத்து மணியென்பது நீல மணியைக் குறித்துவருதலாலும், இத்தொடர் நீலரத்நமும் பவழமுங் கலந்துகோக்கப்பட்டதோர் மாலைபோலச் செந்தமிழும் வடமொழியுங் கலந்தியன்றநடையைச் சுட்டுமென்பர்.

இங்குக்கூறிய மூன்றுபொருள்களில் முதலிற்கூறியபொருள் கருத்தாற் சிறிதுவேறுபடுமாயினும், பின்னர்க்கூறிய இருபொட்குங் கருத்து ஒன்றே.

இப்பெயர்வந்ததற்குக்காரணம் எவ்வாறாயினும் ஆகுக. சிலர் விஜாதீயமான இருபொருள்களின்சேர்க்கையின் பயனென்றுகருதி, இந்நடையைப் பாராட்டாராயினும் நடுநிலையாகநோக்குவோர்க்கு இந்நடை ஒட்டுமரக்கனிபோலவும் பாலுந்தேனுங்கலந்த கலப்புப்போல வும் மிக்க இனிமைதருவதோர் நடையென்பதிற்சந்தேகமில்லை.

வடமொழியுந் தென்மொழியும் தெய்விகபாஷைகளாய் ஒத்த சிறப்பினவாதல் எப்படி? வடமொழியன்றோ தேவபாஷையெனப்படுவ தென்னின்?—

"மாரியுங்கோடையும்வான்பனிதூங்கநின்
றேரியுமின்றங்கிளைக்கின்றகாலத்தே
யாரியமுந்தமிழும்முடனல்கிக்
காரிகையார்க்குங்கருணைசெய்தானே."

"இருமொழிக்குங்கண்ணுதலார்முதற்குரவரியல்வாய்ப்ப
விருமொழியும்வழிப்படுத்தார்முனிவேந்தரிசைபரப்பு
மிருமொழியுமான்றவரேதழீஇயினுரென்றாலிவ்
விருமொழியுநிகரென்னுமிதற்கையமுளதேயோ" என்றபடி,

ஆதியிற் சிவபெருமான் இவ்விருமொழியையும் வெளிப்படுத்தி, பின்பு இலக்கணமுபதேசிக்க ருஷிகளே இவ்விருமொழிகளிலும் இலக்கண நூல்களையியற்றினர்களாதலால், இவ்விரண்டும் தெய்விகபாஷைகளாய் ஒத்தசிறப்பினவாதல்பெறப்படும்: அன்றியும், ஸம்ஸாரஹஸ்யத்தில் 'ப்ராக்ருதம் ஸரஸ்வதீதேவியின் மழலைச்சொல் லாதலாலும், தமிழ் அகத்தியமுனிவராற் பரவச்செய்யப்பட்ட ஆர்ஷமானபாஷையாதலாலும் வடமொழிபோலவே இவ்விரண்டும் ஏற்றுக்கொள்ளத்தக்கன' என்றுகூறியதும் இங்குக் கருதத்தக்கது. அல்லாமலும், "கேட்டாரார்வானவர்கள்செவிக்கினியசெஞ்சொல்லே" என்ற திருவாய்மொழியாலும், "ஆகஸ்த்யமும் அநாதி; வடமொழிமறையென்றது தென்மொழிமறையை நினைத்திறே'' என்ற ஆசார்யஹ்ருதயத்தாலும், 'திரிபுரமெரித்தவிரிசடைக்கடவுளும் குன்றமெறிந்தமுருகவேளும் அகத்தியனாரோடு தலைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார்' என்ற இறையனாரகப்பொருளுரையாலும், "மாலிருஞ்சோலைமலைச், சங்கத்தழகர்'' என்ற அழகரந்தாதியாலும், "தண்டமிழ்ச்சங்கத்தனியிறையவனே" "சுத்தத் தமிழ்ப்புலவர், சங்கத்திருப்பிரியான்" என்ற அழகர்கலம்பகத்தாலும் தமிழ் தொன்மைக்கடவுண்மொழியென்பது தெற்றெனவிளங்கும். இது நிற்க.

இந்தமணிப்ரவாளநடையில், மணி யின்னதென்றும், ப்ரவாள மின்னதென்றும் துணிந்து சொல்லுதல் இயலாதாயினும் (பருஷம்ஸம்ஸ்க்ருதபந்தஃ ப்ராக்ருதபந்தஃஸுகுமாரஃ) "பருஷோ ஸக்வய பந்தோ பாஉயபந்தோவிஹோஇ ஸுஉமாரோ" என்றபடி பருவம்வந்தவராதுசொல்லைப்போல வலியஉச்சரிப்புப்பெற்றுத் தனக்குரியமுடிபுமுதலியனபெரும்பாலுமின்றி ஒளிமாழ்கிக்கிடக்கும் வடமொழியைவலியதோற்றத்துடன்கூடி ஊன்றிப்பாராதபோது ஒளியுடன்விளங்காதுநிற்கும் பவளமாகவும், இன்னிசையுடைய தாய் இனிமையென்றபொருளைத்தரும் தமிழென்பதையே தனக்குப் பேராகப்பெற்று இயல்பாகவே சுவைகொண்டுவிளங்கும் மழலைச் சொல்போலினிய தென்மொழியை மணியாகவும் ஒருபடியாகக் கொள்ளலாமென்று தோன்றுகின்றது.

இனி, தெலுங்குமுதலிய பிறமொழிகளிலும் வடமொழிச்சொற்கள் கலந்துவழங்குமாயினும், அந்நடை மணிப்ரவாளமென்று வழங்கப்பெறுமைக்குக் காரணம் என்னோவெனின்?—அவை தமிழ்மொழிபோல வடமொழியோடு வேறுபட்டுநில்லாமல், ஐவர்க்கத்திடை மூன்றெழுத்துக்களும் ஸம்புக்தாக்ஷரங்களும் முதலியனபெற்றும் வடமொழிப் போக்கையுடைய லக்ஷணக்ரந்தங்களைப்பெற்றும் வடமொழியோடு ஒன்றுபட்டுவிடுதலா லென்னலாம். தமிழோ அத்தன்மையதன்று: மேலும், தமிழ்மொழிக்கு இலக்கணவகையிற் சில சிறப்பியல்புகளும் உண்டு: அவற்றை,"தமிழ்மொழிப்புணர்ச்சிக்கட்படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு வினைத்தொகைமுதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணைமுதலிய சில சொற்பாகுபாடுகளும், அகம் புறமென்னும் பொருட்பாகுபாடுகளும், குறிஞ்சி வெட்சிமுதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பாமுதலிய செய்யுளிலக்கணமும், இன்னோரன்னபிறவும் வடமொழியிற் பெறப்படா" என்று சிவஞானமுனிவர் எடுத்துக்காட்டியுள்ளார்.

இனி, இந்நடைக்கு இப்பெயர் எவ்வாறுவந்ததென்றுபார்ப்போம். அகநானூற்றில் முதலிலுள்ள நூறுபாடல்கள் களிற்றியானை நிரையெனவும், இடையிலுள்ள நூற்றெண்பதுபாடல்கள் மணிமிடை பவளமெனவும், பின்புள்ள நூறுபாடல்கள் நித்திலக்கோவையெனவும் சொல்லப்படுகின்றன: அவற்றுள் மணிமிடைபவளமென்பதற்குச் செய்யுளும் பொருளும் ஒவ்வாமையால் இஃது உவமையாற்பெற்றபெயரென்று முன்னோர் காரணங்கூறியிருக்கின்றனர். ஆகவே, ஒன்றோடொன்று ஒவ்வாத இருமொழிகளினாலியன்ற இந்தநடையும் அப்பெயரினால்வழங்கப்பட்டதென்னலாம். எனவே, மணிப்ரவாளமென்ற இப்பெயர் நூதனமாகக்கற்பிக்கப்பட்டபெயரன்றென்றும், முன்னோரால்தானேவழங்கப்பட்டபெயரென்றும் தெரிகின்றது. ஆயினும், யான் அறிந்தவரையில், வடமொழியும் தென்மொழியும்விரவிய இந்நடை மணிப்ரவாளமென்றபெயரால் பலகாலமாக உலகில்வழங்குவதன்றி, முன்னோர்நூல்களிற் குறிக்கப்பட்டிருப்பதாக ஏற்படவில்லை.

இனி, இந்நடைதோன்றியவாற்றைப்பற்றிச் சற்று ஆராய்வோம். தமிழ்மொழி முதலிற் பரதக்கண்டத்தின்தென்பகுதியில் வேறொரு

பாஷையின்கலப்பின்றி இயங்கிவந்தது. அக்காலத்தில் தென்மொழி யாளர்மாத்திரமே இத்தமிழ்மொழியைக் கைக்கொண்டுவந்தமையால், இம்மொழியிற் புறச்சொற்கள் கலப்பதற்கு இடமில்லாதிருந்தது. ஆயினும் அவ்வாறிருந்தது வெகுகாலத்திற்குமுந்தியாதலால், அப்படிப் பட்டநூல்கள் தமிழில் இப்போதுள்ளன என்று துணிந்துசொல்லு வதற்கு வழியில்லை: இதுபற்றியன்றே சுவாமிநாததேசிகர் தாம்செய்த இலக்கணக்கொத்தில் "அன்றியுந்தமிழ்நூற்களவிலையவற்றுள், ஒன்றே யாயினுந் தனித்தமிழுண்டோ" என்றுகூறியது. காலக்ரமத்தில், வடமொழியாளரும் இத்தமிழைப் பயின்றனர். பயிலவே அவ்வட மொழியாளரின்கொள்கை நாகரிகம்முதலியன தமிழரிடங்கலந்தன; கலக்கவே தமிழரின்கொள்கை நாகரிகம் முதலியவற்றைமாத்திரந் தெரி விக்குஞ் சுத்தத்ராவிடமானநூல்கள் இயக்கங்குறைந்து நாளடைவில் மறைந்தனபோலும். இதுமுதற்கொண்டு தமிழில் வடமொழிகலந்து வழங்கத்தலைப்பட்டது. இக்காலம் வடமொழியில்வல்லவரான அகத் தியமுனிவர் இத்தமிழ்நாட்டில்வந்துசேர்ந்தகாலமாகவேயிருக்கலாம்; இது தொல்காப்பியந்தோன்றியகாலத்தினும் மிக முந்தியிருக்கவேண் டும்: இலக்கியங்கண்டு அதற்கு இலக்கணமியம்புதல் முறைமையாத லின், "வடசொற்கிளவிவடவெழுத்தொரீஇ, யெழுத்தொடுபுணர்ந்த சொல்லாகும்மே," "சிதைந்தனவரினு மியைந்தனவரையார்" என்று ஆசிரியர்தொல்காப்பியனார் சூத்திரஞ்செய்திருப்பதே இதற்கு ஏற்ற சான்றாகும். ஆகவே, அந்நூலை இலக்கணமாகக்கொண்டுள்ள எட்டுத் தொகை பத்துப்பாட்டு பதினெண்கீழ்க்கணக் கென்பனவும் வடமொழி விரவியனவே: என்றாலும், வடசொற்கள் அந்நூல்களில் மிகுதியாக இல்லை. இவ்வாறு வடமொழிகள் தமதுவடிவத்திற்சிதைந்தும் தற்சம மாகவும் தமிழ்மொழியில்வழங்குதல் வரவர மிகுதியாக ஆயிற்று. எட்டுத்தொகைமுதலிய நூற்றொகுதிகளினும் ஐம்பெருங்காப்பியங் களில் வடமொழிமிக்கிருத்தலைக் காணலாம். ஆயினும், பெரும்பாலும் தமிழ்ச்செய்யுள்நூல்களில் வடசொற்களைத்திரித்துத் தற்பவமொழிக ளாகவும் தற்சமமொழிகளாகவும் வழங்கிவந்தார்களேயன்றி, வட மொழிச்சொற்களை அவற்றின் இயற்கைவடிவோடுவழங்கமாத்திரம் அநேகமாக ஆரம்பிக்கவில்லை. என்றாலும், நாளடைவில் மதப்பற்றுள்ள வர்கள் நூல்செய்யத்தொடங்கியபோது சிறுபான்மையாகச் செய்யுள் நடையிலும் மணிப்ரவாளம்போன்றநடைவழங்குவதைக் காண்கின் றோம்: உதாரணமாக,

"புராதநாகமவேஷிதபுராணரூபமொழித்துவெங்
கிராதனாகியவடிவுகொண்டகிரீஶனோடுரைசெய்குவான்
விராதநாதிநிஶாசரேஶரைவென்றுமுச்சிகரத்தின்மே
விராதவாறடலமர்புரிந்தவிராமனேநிகர்தன்மையான்"

என்ற வில்லிபுத்தூரார்வாக்கும்,

"பாலவ்ருஷகுமாரனெனச்சிலவடிவுகொண்டுநின்றாயென்றுவம்பிலே
ஞாலநின்னைவியக்குநயக்குமென்நடனங்கண்டும்வியவாமையென்சொல்கேன்
பாலலோசநபாநுவிலோசனபரமலோசநபக்தஸஹாயமா
காலகாலத்ரிஶூலசபாலவேகம்பஸாம்பகடம்பவநேஶநே"

என்ற குமரகுருபரசுவாமிகள்வாக்கும் முதலியன காண்க.

இனி, பேசும்போது வடசொற்களிற் பலவற்றை அவற்றின் இயற்கைவடிவத்துடனேவழங்கிவந்தார்க ளென்றாலும், செய்யுள்நடையிலும் உரைநடையிலும் ஊற்றமுள்ள சிலரே இந்த மணிப்ரவாள நடையைக் கையாண்டுவந்திருப்ப ரன்றி, இந்நடை எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப்பெற்று ஒருநிகராகவழங்கிற்றென்றுசொல்லுதற்குமாத்திரம் இடமில்லையென்று தோன்றுகின்றது. இப்போழ்து 'பெருந்தேவனார்பாரதம்' என்று வழங்கப்படும்நூல் பாரதம்பாடியபெருந்தேவனார்' என்று கடைச்சங்கப்புலவருள் ப்ரஸித்தராகக் கூறப்படுகின்ற பெருந்தேவனாரதுவாக்காகவேயிருக்குமாயின், கடைச்சங்கத்தார்காலத்தும் இந்த மணிப்ரவாளநடைவழங்கப்பட்டதென்று கொள்ளுதற்கு இடமுண்டாகின்றது: அப்பெருந்தேவனாரது உரைநடையில் மணிப்ரவாளங்காணப்படுவதைத்தெரிவித்தற்காக இங்கு அவர் உரைநடையைக் காட்டுகின்றேன்: அது வருமாறு :— "இவ்வகை பேசிய அஶரீரியாகிய ஆதித்யபகவானும் அந்தர்தாநஞ்செய்தபின்பு, கன்னனுடைய த்யாகஶக்தியின்மஹாநுபாவங்கண்டு தேவஜாதிகளும் ஆஶ்சர்யப்பட்டுப் புஷ்பவர்ஷம் பொழிந்தார். அப்பொழுது ப்ராஹ்மணனும் எல்லையில்லாததோர் ப்ரியமெய்தியவிடத்து, கன்னன் தன்கவசகுண்டலங்களைத் தானே வாங்குமளவில் தைவிகத்தினால் அவை குழைநெகிழ வாங்கி தேவேந்த்ரன்ஹஸ்தம் கீழ்ப்படத் தன் கை மேற்பட அகமலர்ந்து இன்சொலுடன்கொடுப்ப, தேவேந்த்ரனும் வாங்கி மஹாப்ரியஸ்தனாய் 'நின்னையொக்கும் த்யாகபரர் இல்லை' என்று சொல்லி ஸ்வாகதஞ்சொல்லி, மற்று அந்தக் கன்னனைவிட்டு

நீங்கி மீண்டு போந்து, ஶார்ங்கபாணி சக்ரமேந்தி பஞ்சாயுதன் பவித்ர மூர்த்தி ஸ்ரீவாஸுதேவன்பக்கல்போய்த் திருவடிதொழுது கவச குண்டலங்களைக்காட்டித் தேவலோகத்துக்குப்போவானாக விடை வேண்டினனைத்தடுத்துப் பின்னும் யாது அருளிச்செய்தான் ஸ்ரீவாஸு தேவன்" என்பது. மணிமேகலையின்சரிதைநிகழ்ந்தகாலத்திருந்தவ ராகிய சீத்தலைச்சாத்தனாரெழுதியமணிமேகலையில், தவத்திறம்பூண்டு தருமங்கேட்டகாதையில், தர்க்கவிஷயங்களைக்கூறுமிடத்து மணிப்ர வாளம்போன்றநடை செய்யுளில் இருப்பதுகொண்டு, கடைச்சங்கத் தார்காலத்தில் இந்த மணிப்ரவாளநடைவழங்கியிருக்கலாமென்ற எண் ணம் வலியுறுகின்றது: கடைச்சங்கத்தார்காலம் இற்றைக்கு ஆயிரத் தெண்ணூறுவருஷங்கட்கு முன்னென்பர்.

ஏறக்குறைய ஆயிரம்வருடஞ்சென்ற சிலாசாஸநங்களிலும் இந் நடை காணப்படுகின்றது: அவற்றிலொன்று வருமாறு:— ஸ்வஸ்திஸ்ரீ ராஜகேஸரிவர்மற்கு யாண்டு இருபத்துமூன்றாவது. காலியூர்க்கோட் டத்துப் பாகூர்நாட்டுச் சிவசூளாமணிமங்கலமாகிய அபராஜிதச்சதுர் வேதிமங்கலத்து ஸபையோமெழுத்து. இக்கோட்டத்துத் தென் கூற்று உத்தரமேருச் சதுர்மங்கலம் ஆளும் கணத்தாருட் செதிறார்த் த்ரிவிக்ரமபட்டராகிய ப்ரஹ்மராஜர்பக்கல்கொண்ட பொன் இரு நூற்றுக்கழஞ்சு. இப்பொன்னின் வ்ருத்தியாலும் எம்மூர்ப் புவனி மாணிக்கத்து விஷ்ணுக்ருஹத்துப்பெருமானடிகள் உச்சம்போழ்து திருவமிர்துசெய்வதன்முன்னம் நிசதி பன்னிருவர் ப்ராஹ்மணர் வேதம் வல்லார் உண்பதாகவும். இப்பன்னிருவர்க்கும் ஶரீரம் ப்ரதி ஆழாக்கு நெய்யும் ஐந்துகறியும் ஐயுழக்குத்தயிரும் இவ்விரண்டுகாயும் இலையும் இவர்கட்கு தக்ஷிணையாமளவும் ஊட்டுவதாக. இப்பன்னிருவர் ப்ராஹ்மணர்க்கும் அடுவார்க்கும் விறகிடுவார்க்கும் மற்றும் எப்பேர்ப் பட்டதும் அடங்க இப்பரிசு ஊட்டுவதாக. இவ்விருநூற்றுக்கழஞ்சுங் கொண்டோம். இப்பரிசு ஊட்டாமே விக்னஞ்செய்தார் மஹாஸபையிடை செய்தார் செய்த பாபமெல்லாங் கொள்வாராகவும். இப்பரிசு முட்டில் முந்தரஞ்செய்த இஷ்டாபூர்த்தம் ப்ரஹ்மராஜனுக்கே ஆவதாகவும். இப்பரிசு ஒட்டி ஶிலாலேகை செய்துகொடுத்தோம் ஸபையோம். ||ஸ்வஸ்திஸ்ரீ||—

இனி, இந்நடையை ஏற்றுக்கொள்ளுதல் இன்றியமையாததெனக் காட்டுவோம். பாஷைகளென்பன இவ்வுலகத்துத் தலைப்பட்டதன் நோக்கம் மானிடர் தம்மனத்திற்கொண்டிருக்குங் கருத்துக்களை பிறர்க்குப் புலனாகும்வண்ணம் ஒலிவடிவினாற்செய்தலேயாதலின், வழக்காற்றிலுள்ள மொழிகள்யாவும் நாகரிகநிலைக்குத்தக்கபடி புதியகருத்துக்களைவெளிப்படுத்தவும் அவற்றிற்கு ஏற்றபடி சொற்களையும் சொற்றொடர்களையும் அடையவும் தாம்பயில்கின்ற இடத்து வழங்கும் வேற்றுமொழிச்சொற்கள் தம்முள்விரவவும் பெறுதல் இயல்பே. இதற்கு உதாரணமாக, மொகலாயர் முதலியோர் நந்நாட்டை அரசாண்டகாலத்தில் தாகல் அம்பாரி திவான் பக்கிரி அத்தர் முதலிய எத்தனையோசொற்கள் ஹிந்துஸ்தானிமுதலிய வேற்றுமொழிகளிலிருந்து இந்நாட்டில் வழங்கத்தலைப்பட்டன. இவற்றுட் சில உலகவழக்கோடுநில்லாமல் செய்யுள்நடையிலும் வந்தேறின: இவ்வுண்மையை "கற்பகத்திருநாடுயர்வாழ்வுறச் சித்தர்விஞ்சையர்மாகர் சபாசென," "சுராதிபதிமாலயனுமாலொடுசலாமிடுசுவாமிமலை," "குறவர்மகட்குச்சலாமிடற்கேக்கறுகுமரனே" என்னும் ப்ரயோகங்களினாலும் அறியலாகும். இங்ஙனமே நமதுநாட்டிற்பரவியிருக்கின்ற ஆங்கிலமொழியும் நமதுதமிழ்மக்களால், தமிழ்ப்பாஷையிற்புகுத்தப்படுவதுங் காண்க. நமது தமிழ்மொழியோடு தொடர்பற்றனவென்று எண்ணப்படும்மொழிகளே இவ்வாறு நமது தென்மொழியோடு கலந்துவிடுமாயின், தமிழ்த்தேயத்தார்பலரும் தமக்கு உரியபாஷையாகக்கொள்ளுகின்ற வடமொழி நந்தமிழ்மொழியோடுகலத்த லேற்குமென்பதைப்பற்றி விசேஷித்துச்சொல்லவேண்டுமோ? இதனால், தமிழில் வடமொழிகலந்தகாரணத்தை யெடுத்துக்கூறினேனேயன்றி, பலபாஷைகளையும் நந்தமிழ்மொழியோடுசேர்த்து நந்தமிழ்மாதை உருக்குலைத்துவிடவேண்டுமென்று சொல்லுகின்றேனல்லேன். கீழ்க்கூறியவாறு வடமொழியைத் தமிழ்மொழியிற்கலந்து வசனநடையில் எழுதும்பொழுது, வட்டிஞானம்முதலியனபோல் எளிதிற்பொருளுணரக்கூடியசொற்களைத்தவிர்த்து மற்றை வடமொழிச்சொற்களை உருக்குலையாமல் உள்ளபடியேயெழுதுவது, பிறர் எளிதிலுணர்தற்குரியவழியாம். இவ்வாறாகிய மணிப்ரவாளநடையை எழுதுவதற்கு, கிரந்தலிபி, தென்மொழியாளர்க்கு ஏற்றவரிவடிவாக அமைந்திருக்கின்றது. இப்படி எழுதுவதைவிட்டு, சயமரம்

ப்ரமகஞ்சர் அதிட்டம் சிருச்சியம் என்பனபோல வடமொழிகளைத் திரித்து உருக்குலைத்து உரைநடையிலும் சிலர் எழுதுகின்றனர். இந்நடையினை வெறுந்தமிழரும் உணர்ந்தபிறரையடுத்துக்கேட்டன்றி எளிதிலுணர்த லருமை; வடமொழிமாத்திரமுணர்ந்தோரும் பொருளை யறித லருமை: அன்றியும், சிற்சிலவிடங்களிற் பொருள்கொள்வதில் ஐயமும், சிற்சிலவிடங்களில் விபரீதப்பொருளுந் தோன்றுகின்றன. இவ்வகையிடர்ப்பாட்டிற்கெல்லாம் உள்ளாகாதிருத்தலைக்கருதியே அறிஞர் சிலர், மணிப்ரவாளநடையைக் கைக்கொள்ளலாயினர். இப்போழ்து, யான் வடசொற்களைத்திரியாது உள்ளபடிஎழுதுவதிலுள்ள நன்மையை வியத்தற்காக நஹிநிந்தாந்யாயம்பற்றி இவ்வாறுகூறுகின்றேனேயன்றி, வடமொழிச்சொற்களைத் திரித்துக்கூறுவதை யிழித்துக்கூறவேண்டுமென்னுங்கருத்தினாற் கூறுகின்றே னல்லேன். [நஹிநிந்தாந்யாயமாவது- உயர்த்திக்கூறவேண்டுமென்றுகருதிய ஒன்றை மேன்மைப்படுத்துவதற்காக, மற்றொன்றை யிழித்துக்கூறவேண்டுமென்னுங்கருத்தில்லாமலிருக்கையிலும் இழித்துக்கூறுதல்.] இதனால், வசனநூல்களையெழுதுமிடத்து, முன்னமே திரிந்து உலகவழக்கில்வழங்கிய வடசொற்களைத் தவிர மற்றை வடமொழிகளைத் திரித்துக்கொண்டு இடர்ப்படாமல் மணிப்ரவாளநடையிலெழுதுவதே உத்தமமென்று கூறியவாறாயிற்று.

இனி, மதவிஷயமாகப்பார்க்கையில், முதலில் இந்நடையை மேற்கொண்டவர்கள் பௌத்தரும் ஜைநருமென்றுதோன்றுகின்றது. எவ்வாறெனில், ஜைந பௌத்தமதங்கள்தோன்றியபோது, அம்மதத்தவர்கள் வடதேசத்திலிருந்தவர்க ளாதலாலும், அம்மதங்கள் வைதிகமதங்கட்கு மறுதலையாக எழுந்தன வாதலாலும், அவர்கள் வைதிகமதங்களைமறுத்துத் தம்மதத்தை நிலைநாட்டக்கருதியபோது அவ்வேதங்கள் வரையப்பெற்ற வடமொழிகளினாலேயே அவற்றைக் கண்டிக்கவேண்டிவந்ததனாலும், அன்னார் வடமொழியிற்பயின்று தம்மதங்களை அம்மொழியிலெழுதிவைக்கலாயினர். பின்னர் அவர்கள் தம்மதத்தை உலகமுழுவதும்பரவச்செய்ய வேணவாக்கொண்டு ஆங்காங்குச்சென்று ஜனங்களைத் தம்மதத்தவராக்குமாறு ப்ரஸங்கிக்கத்தலைப்பட்டபோது, உலகத்துப்பயில்கின்றபாஷையினாற் பிரசங்கஞ்செய்தால்மாத்திரமே தமது நினைவு முற்றுப்பெறுமென்று உறுதிகொண்டு, வடநாட்டிற் பாலி முதலியபாஷைகளினால் தம்மதத்தைப் பரவச்செய்ததுபோல், தென்

னாட்டில்வந்தபோது அக்காலத்துப் பேசப்பட்டிருந்தமொழியிலே பிரசங்கிக்கலாயினர். தம்மதத்தை அவ்வாறு பரவச்செய்கையில், புதியனவாகத் தமிழிற் பலசொற்களைப் படைத்துக்கொள்வதைக்காட்டிலும் மதஸம்பந்தமான பரிபாஷைமுதலியவற்றை வடமொழியாகவே வழங்குவது அன்னார்க்கு எளிதாயிருந்தமையால், தமதுபேச்சில் மிகுதியாக வடசொற்களையும் வடசொற்றொடர்களையும் அன்னார் சேர்க்கத் தொடங்கினார்கள்; அவ்வாறு தாம்பேசியநடை இனிதாயிருந்ததனாலும் எல்லோர்க்கும் இனிது பொருள்விளங்கியதனாலும் அந்நடையிற் சில நூல்களும் எழுதிவைத்தனர். இவ்வகைநூல்களுட் சிறப்புற்று விளங்குவது ஜைநர்களெழுதிய ஸ்ரீபுராணமாகும்: இந்த ஜைநர்களெழுதிய மணிப்ரவாளநடைநூல்களில் ஜயகுமாரன்கதை ஒத்தாயணமஹாராஜன்கதை பாரிஷேணகுமாரன்கதை ஸத்யகோஷன்கதைமுதலிய பலநூல்கள் இப்போதும் கிடைக்கின்றன. பௌத்தர்கள் இந்நடையிலெழுதியதை நீலகேசியினுரையிற் சிறிதுகாணலாம்.

பௌத்த ஜைநர்கள் மணிப்ரவாளநடையிற் பழகத்தொடங்கிய பிறகு, இந்நடையை மிகுதியாகக்கைக்கொண்டவர்கள் வைஷ்ணவர்களென்றுசொல்லலாம். இவர்களிற் பெரும்பாலார் வடமொழியில் வல்லுநர்: இவர்கள் தமக்குரிய அஸாதாரணவேதமாகக்கொண்டவை தமிழ்மொழியிலுள்ள திருவாய்மொழிமுதலிய திவ்யப்ரபந்தங்கள். இப்பிரபந்தங்களின்கருத்தைப் பரக்க உபந்யஸிக்கும்போது ஸ்ருதி ஸ்மிருதி இதிஹாஸபுராணங்களையெல்லாம் மேற்கோள்காட்டிச்சொல்ல வேண்டிவந்தது: அன்றியும், அவ்வாறு பொருள்விரிக்குமிடத்து, கூடலிழைத்தல் மடலூர்தல் பல்லாண்டுபாடுதல் செங்கீரையாடுதல் உந்திபறத்தல்முதலிய சொற்றொடர்கட்கு ஏற்ற எளியவடசொற்கள்கிடைப்பது அருமையாதல்போலவே உபாயோபேயபாவம் கார்யகாரணபாவம், ஸாமாநாதிகரண்யம் த்ரிவ்ருத்கரணம் புருஷகாரம்முதலிய வடசொற்களுக்கு ஏற்ற வழக்காற்றிலுள்ள தென்மொழிகள் கிடைப்பதும் அரிதாயிருத்தலைக் கண்டனர். காணவே, மணிப்ரவாளமென்ற இந்நடையை ஏற்றுக்கொள்வதன்றி அவர்கள் வேறு யாதுசெய்வார்கள்? அவர்கள் எழுதியனவெல்லாம் வேதாந்தநூல்களே. மணிப்ரவாளநடையினாலியன்ற அவைகள், பெரும்பாலும் வ்யாக்யாநரூபமாகவும் வசனரூபமாகவும் அமைந்துள்ளன.

இனி, சைவர்கள் தம்மதத்தைத் தென்மொழியிலெழுதுகையில், பெரும்பாலும் வடசொற்களைத்திரித்துத் தமிழ்வடிவுகொடுத்து எழுதலாயினர். இதனைச் சிவஞானபாடியம் முதலியவற்றிற்காணலாம்: மணிப்ரவாளநடையிலும் சில காணப்படுகின்றன: அவை, சிவஞான சித்தியார்க்குச் சிவாக்ரயோகிகளும் ஞானப்ரகாசரும் எழுதிய வியாக்யாநங்கள்போல்வன. இங்கு எடுத்துக்காட்டிய நான்குமதத்தவர்களும் மணிப்ரவாளநடையில் நூலியற்றியிருக்கின்றனர். ஒவ்வொருமதத்திலும் நூலாசிரியர்கள்பலர் இயற்றிய மணிப்ரவாளநடை அவ்வம்மதத்துநூல்களோடு ஒத்துப்பார்க்கையில், செய்தோரின்வேற்றுமையால் ஒன்றற்கொன்று சிறிதுவேறுபடுதல் இயல்பே யாயினும், பெரும்பாலும் ஒத்திருக்கின்றது; ஆயினும், வைஷ்ணவர்களின் மணிப்ரவாளநடை ஒருதன்மையதாகவும், மற்றையோரின் மணிப்ரவாளநடை ஒருதன்மையதாகவுங் காணப்படும்.

இப்பொழுது யானெடுத்துக்கொண்ட இந்தச் சிறிய உபந்யாஸத்தில், மணிப்ரவாளமென்பதற்குப் பொருளும், மணிப்ரவாளநடை இனிமை தரத்தக்கதென்பதும், தமிழும்வடமொழியும் ஒத்தசிறப்பினவென்பதும், மணியும் ப்ரவாளமும் இன்னவையென்பதும், வடமொழியும் பிறமொழிகளுங்கலந்த கலவை இப்பெயரால் வழங்கப்பெருமைக்குக் காரணமும், இப்பெயர்தோன்றியவழியும், இந்நடைதோன்றியவகையும், இந்நடைவழங்கப்பெற்ற காலமும், இந்நடை கொள்ளத்தக்கதென்பதும், ஜைந பௌத்த வைஷ்ணவ சைவர்கள் இந்நடையைக் கைக்கொண்டுள்ளாரென்பதும், இந்நடையாலியன்ற நூற்பரப்பின் தாரதம்யமும் என்னும் இன்னவற்றை ஒருவாறுகூறியாயிற்று.

அவகாசக்குறைவுபற்றிப் பரக்களழுதுவதற்கு இயலாமையால், தொகுத்து எழுதலானேன். சமயம்வாய்த்தவிடத்து விரித்துரைக்க உத்தேசித்திருக்கின்றேன்.

---

வை. மு. கோபாலக்ருஷ்ணமாசாரியர்.

ஸ்ரீ:

# ஆழ்வார் திருநகரிச்சாசனங்கள்.

"செந்தமிழ்" (தொகுதி-கக பகுதி கக-ல்) ருஅஎ-ம் பக்கத் தொடர்ச்சி.

## சாசனம் XVII.

**காலம்:—** எம்மண்டலமுங்கொண்டருளிய மா. குலசேகர தேவற்கு 22 ஆவது ஸூ.

விஷயம்:—ஆழ்வார்சோபானமண்டபம் கட்டினது.

இடம்:—ஆழ்வார்சோபானம் தென்வாயிலுக்குமேல்புறம்.

(1) ஸ்வஸ்திஸ்ரீ சீ கோமாறபன்மரான த்ரிபுவனசக்கரவர்த்தி-

(2) கள் எம்மண்டலமுங் கொண்டருளிய சீகுலசேகரதே-

(3) வற்கு யாண்டு உயஉவது பங்குனிமாதம் திருக்கானப்

(4) பேற்கூற்றத்து ஆனூந்தூரான அயிகாரசுந்தரநல்லூர்

(5) திருநாடுடையான் வேலேற்றூனை பல்லவராயர் செ-

(6) ய்வித்த திருமண்டபம். ஸ்வஸ்த்யஸ்து.

---

## சாசனம் XVIII.

**காலம்:—** சுமார் 250 ஸூத்துக்குமுன்.

விஷயம்:— சிக்கல் அலமேலுஜாநி, தன் ஆசார்யன் உடையவர் ஸந்நிதி எம்பெருமானார்ஜீயர்ஸந்நியாக, தினம் குறுணி அரிசி ப்ரஸாதம் அமுதுசெய்யப்பண்ணி, ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கொடுத்தது.

இடம்:—ஆழ்வார்சோபானம் மேலேப்படியின் மேற்கு.

1. ஸாஹஸ்ரேஷ்டசதே சாகே ஸ்ராவணே நவமீதிதௌ।

2. ஸ்ரீ ஸ்வத்தாமாங்கஸாமாக்ஷ்ய வஸ்து ஸௌமிமாக்ஷ ஸாலநே॥

நம் வ-

3. ழுதிநாட்டுக்குருகூர்வீட்டில் நம்புளிக்கீழ்க்காவணத்து நம்
4. சடகோபசிஙஹாஸன்பந்தல்கீழ் நம் வண்டுவராபதிமாமுனிகட்டி-
5. வில் நாமும் நம்பெண்டுகளோடும் நம்சடகோபனோடும் கூடி
6. இருந்து ஆராதனைகொள்ளாநிற்க இராமாநுசன்வீட்டில் இ-
7. ருந்து நிதஹ்வாஸம்செய்துபோரும்எம்பெருமானார்எதிர(ராஜ?) ஜாவலன்
8. ஶிஷ்ஹரான சிக்கல் திருவேங்கடமுடையார் வடாதிரு அலே மேல்மங்கை
9. ஜாநி வழிபாடாக எம்பெருமானர் எதிர (?) ஜாவநுஸந்தி யாக நமக்கு ஆராதனை
10. நடத்தி ஶ்ரீவைஷ்ணவர்களுக்கு நம் கலத்திலது குடுக்குமாறு கற்பித்து இவ்
11. வகைக்கு விஙஹதிகொண்டுநடக்கும்படி நம்அறைக்குமுத
12. லாக ஒடுக்கின கலியுகராமன்ப (பணம்) ௩௬. இதுக்கு உள்ள - விஙஹதிகொண்
13. டு நாடு(ளான்று)க்கு அரிசிகுறுணியாக நம் அறையினின் றும் ஆராதனைநடந்து
14. ஶ்ரீவைஷ்ணவர்களுக்கு நம்கலத்திலது குறுணியும் குடுக்க வேணுமென்று இவ்வ-
15. கைக்கு நடக்க நம் இராமாநுசன்வீட்டுக்குமேற்கு நம்வரியி லார்கணக்குப்படி (?)
16. ஆரியப்பட்டர்களில்கெங்கைஆடிபட்டன்அஞ்சாலிகொண்ட மனை
17. மேற்படிபேர்குடிஆகையில் இந்தமனைமூன்று (முழுது)க்கு எல்கை தெருவுக்கு
18. மேற்கு நாராசத்துக்குவடக்கு தோப்புக்கு

(இன்னும் சிலவரி நன்றாய்த்தெரியவில்லை.)

---

## சாசனம் XIX.

இடம்:—ஆழ்வார்சோபானம் மேலைப்படியருகு.

காலம்:— சோணாடுவழங்கியருளிய மா - சுந்தரபாண்டிய தேவர்க்கு 8-வது வருஷம்

விஷயம்:— திருக்குருகூர்மஹாமுனி, பெருமாள் திருமூலைத் திருநாள்களில் ஆழ்வார்திருமஞ்சனத்துக்கும் தளிகைக்கும் ஏற்பாடுசெய்தது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறவன்மரான த்ரிபுவனசக்கரவத்திகள்சோணாடு வழங்கியருளிய ஸ்ரீசுந்தரபாண்டியதேவற்கு யாண்டு எட்டாவது திருவழுதிவளநாட்டு திருநகரி (பொ?)

(2) லிஞ்சுநின்றபிரான் ஆவணித்திருநாளிலும் வைகாசித்திரு நாளிலும் திருமூலைநாள்திருமூலைப்புழுதிகொள்ள திருநாடுடைய பிரான் எழுந்தருளி திருமுடிசூட்டினன் திரு(மண்டபத்?)

(3) தேறியருளினல் திருமஞ்சனத்துக்குவேண்டும் அமுதுபடி சாற்றுப்படிகளுக்கும் திருப்போனகம் முப்பத்திரண்டுக்கும் அப்ப அமுது எண்பதுக்கும் சுருளங்.........

(4) பதுக்கும் நெய்யமுது திருவிளக்கெண்ணைக்கு மற்றும் அமுது படிசார்(த்)துப்படி வேண்டுவனவற்றுக்கும் அச்சுப்பொலிசை யாற் செல்வதாக இவ்வூர் ஸபாஹ.........

(5) ஊன்களுக்கு அருளாளதாதன் மடஞ்செய்வித்த ஆ (?)ள்வார் திருக் குருகூர்மஹாமுனிகள் ஸ்ரீபண்டாரத்திலொடுக்கின அச்சு ௬. இவ்வச்சுஆறின்பலிசைகொண்டு இத்திருவா.........

(6) ஞ் சந்திராதித்தவற்செல்வதாக ஸ்ரீபண்டாரத்திலொடுக்குவித் துக்கொண்டமைக்கு ஸபைக்குசமைஞ்சு ஸ்ரீபண்டாரி திரு வெள்ளறைதேவதேவஸனுன் ஆள்வானுன ஸ்ரீகாரிமாற-

(7) ன் எழுத்து. இப்படிக்கிவை ஸ்ரீவைஷ்ணவக்கண்காணி ஸ்ரீபராங்-குசநம்பி எழுத்து. இப்படிக்கிவை ஸ்ரீகாரியக்கணக்கு வேளான் பொதுவனுன வண்டுவராவதி மூவேந்தவேளான் எழுத்து உ...

## சாசனம் XX.

காலம்:— சோணாடுவழங்கியருளிய மா-சுந்தரபாண்டியதேவர் காலம்.

விஷயம்:— தெய்வப்பாண்டியன் அகஸ்தியரிஷியை தீக்ஷிணை கொள்ளவேணுமென்றுபிரார்த்திக்க அவர்தன்னுடன்வந்த வட செம்மாநளம்பநாட்டு இராஜதித்தனுக்கு..................

இடம்:—ஆழ்வார்சோபானம் தென்வாயிலுக்குமேற்கு.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் சோணாடுவழங்கியருளிய ஸ்ரீஸுந்தர பாண்டிய...........

(2) வது வெள்ளியம்பெருமலை வடசெம்மாநளம்பமென்கிறநாடு வாட்கையுடைய இராஜதித்தனைப் பொதியின்ம .........(அக?)

(3) ஸ்திரீஹஷி உன்பெருக்காண்மைபோல் இருந்ததுகாண உன்னுள்ளமானது நீ நம்முடனேகூடப் பொதியின்மலைக்கு......

(4) டப்போந்து பொதியின்மலையிலேபுகுத இதுகேட்ட தெய்வ(வ)ப் பாண்டியன்வந்து இருஷியைவணங்கிக் குன்றமு(?)...........

(5) ணல் வேண்டு தீக்ஷிணைகொள்ளவேணுமென்று தெய்வப்பாண்டிய(ன்)விண்ணப்பஞ்செய்தவிடத்து நம்முடன்போந்த இர......

(6) ணா.

(இன்னும் சிலவரி செம்மையாய்த் தெரியவில்லை.)

---

## சாசனம் XXI.

இடம்:—ஆழ்வார்சோபானம் தென்வாயிலுக்குமேற்கு.

காலம்:— சோணாடுவழங்கியருளிய மா-சுந்தரபாண்டியதேவர் காலம்.

விஷயம்:—அருளாளன் ஆதிச்சனான சுந்தரபாண்டிய திருநாட்டரையன், பொலிஞ்சுநின்றபிரானுக்கு, வைகாசிக்கொடியேற்றுக்கு ஏற்படுத்தியநிபந்தம்.

(1) ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்மரான திரிபுவனசக்கரவத்திகள் சோணாடு வழங்கி அருளிய ஸ்ரீசுந்தரபாண்டியதேவற்கு

(2) யாண்டுமேகாவது திருவழுதிவளநாட்டு திருநகரி பொலிஞ்சு நின்றபிரான் வைகாசித்திருநாளில் திருக்கோடி

(3) ஆழ்வார் ஏறி அருளுமன்று பொலிஞ்சுநின்றபிரான் அனைத்தழகுங்கண்டான்மண்டபத்து புறப்பட்டருளி அ-

(4) முதுசெய்தருள அரிசிகலமு மாத்திரைசருவுக்கு அரிசிநாழியு மாத்திரைக்கு நெல்லு நாழியும் சந்தனகற்பூர-

(5) த்துக்கும் இலையமுது அடைக்காய்அமுதுக்கு மஞ்சள்காப்புக்கும் நெய்யமுதும் திருவிளக்கெண்ணைக்கும் த-

(6) யிர் அமுதுக்கும் இப்படி சந்திராதித்தவற்செல்வதாக இவ்வூர் அருளாளன்ஆதிச்சனான சுந்தரபாண்டியதிருநா-

(7) ட்டரையன் ஸ்ரீபண்டாரத்தில் ஒடுக்கின அன்றாடு நல்லானை அச்சு இரண்டு. இவ்வச்சு இரண்டில் பலிசைகொண்டு இ-

(8) ப்படி சந்திராதித்தவற்செல்வதானமைக்கு ஸபைக்குசமைஞ்சு ஸ்ரீபண்டாரி திருவெள்ளறைஷேவஷேவசன் ஆள்வா-

(9) ன் ஸ்ரீகாரிமாறசாஸநஎழுத்து. இப்படிக் கிவை ஸ்ரீவைண(வ)க் கண்காணி? திருமுடிசூட்டினான்நம்பி எழுத்து. (இப்படிக்கி)

(10) வை ஸ்ரீகாரியக்கணக்கு வேளான்பொதுவனான வண்டுவராவதி மூவேந்தவேளான்எழுத்து...உ

---

## சர்சனம் XXII.

இடம்:—ஆழ்வார்சோபானம் தென்வாயிலுக்குமேற்கு. கீழ்வரிக்கல்.

காலம்:— சோணாடுவழங்கியருளிய மா-சுந்தரபாண்டியதேவர் காலம்.

விஷயம்:— அழகப்பிரான் சாஸநம், மார்கழித்திருவத்தியயநத்தில் திருப்புளிக்கீழ் ஆழ்வார் திருவாய்மொழிசொல்லும்போது அமுதுசெய்யவேண்டிய திருக்கணமடைக்கு ஏற்பாடுசெய்தது.

(1) ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்மரான த்ரிபுவனச்சக்ரவத்திகள் சோணுடுவழங்கியருளியஸ்ரீசுந்தரபாண்டியதேவர்க்குயாண்டு ய௬-வது திருவழுதி-

(2) வளநாட்டு திருநகரியில் திருநாடுடையபிரான் மார்கழித்திருவத்திய நத்துத் திருப்புளிக்கீழ் ஏறியருளித் திருவாய்மொழி செ(ா)ல்லாநிற்கத் திருக்கணுமடை அமுது-

(3) செய்தருள நாள் ஒன்றுக்கு அரிசி நாழிக்கும் பருப்பு இரு நாழிக்கும் பாலுக்கு தேங்காய் பத்துக்கும் நெய் நாழிக்கும் கருப்புக்கட்டி முப்பத்திருபலத்துக்கும் சுருள் நாற்பத்தி-

(4) ரண்டுக்கு வெற்றிலைக்கட்டு ஆறுக்கும் அடைக்காயமுது நூற் றிருபத்தாறுக்கும் கற்பூரம் இரண்டுமாவுக்கும் தயிலத்துக்கும் ஆக இப்படி திருப்பாவை உள்பட நாள் ஆறுக்கும்

(5) செல்வதாக வேணுவுளநாட்டு ப்ரஹ்மதேயம் ஸ்ரீகுலசேகர சதுர்வேதிமங்கலத்து பெருமாளான ப்ரஹ்மஸ்ரீவைதியாஜி யார்மகன் திருவரங்கநாராயணபட்டனை அழ-

(6) கப்பிரான்தானம் இவ்வாட்டைமார்கழிமாசத்துமூன்றுந்தியதியும் பூர்வபக்ஷத்து ஏகாதசியும் புதன்கிழமையும்பெற்ற ஸ்வாதி நாள் திருநாடுடையபிரான் சீபண்-

(7) டாரத்தில் ஒடுக்கின அன்றூடு நல்லானை அச்சு ௬. இவ்வச்சு ஆறில் பொலிகொண்டு சந்திராதித்தவற்செல்வதாக ஒடுக்கி வித்து கொண்டமைக்கு இவை ஸ்ரீபண்டாரம். இவ்வூர்தி

(குறை)

---

குறிப்பு.

XVII. இச்சாசனத்தால், ஆழ்வார்சோபானமண்டபம் இன்னரால் இன்னகாலத்திற் கட்டப்பட்டதென்றுதெரிகிறது.

---

XVIII. இச்சாசனம், மற்றச்சாசனகாலத்ததல்ல, மிகவும்பிந்திய இக்காலத்து எழுத்துக்களால் எழுதப்பெற்றது. இது'கலியுகராமன் மன்றல்' என்றும் 'கலிப்பணம்' என்றும் சொல்லப்படும் பொற்காசுவழங்கிய காலத்ததாகும். சுமார் 300 வருஷத்துக்குமேற்பட்டிராதென்று தோன்றுகிறது.

1 வரி ஆதிநாதன்.—இவ்வூர்ப் பெருமாளின் திருநாமம்.

2. பராங்குசன் —இங்கு ஆழ்வார் திருநாமம். நெல்வேலிவென்ற நெடுமாறனுக்கும், மற்றையோருக்கும் இப்பெயர்வழக்குண்டு. இச்சுலோகம், பிந்தியகாலத்து இவ்வூர்ச்சாசனங்களிலெல்லாம் தலைப்பிற்காணப்படும்; ஸ்ரீ ரங்கம் அருளிப்பாட்டுச்சாசனத்தைப் பின்பற்றியது. இத்தகையசாசனங்களெல்லாம் சுவாமி கட்டளையிட்டதாகவே வழங்கும். (ஸ்ரீவில்லிபுத்தூர் அருளிச்செயல்சாசனம். செந்தமிழ் பார்க்க)

3. வழுதிநாட்டு:—திருவழுதிவளநாடு, திருநாடு எனவும் வழங்கும். இது சரித்திரகாலத்துக்குமுந்திய தமிழரின் நாகரீகப்பொருள்கள் அகப்படுகிற ஆதிச்சநல்லூர்ப்பறம்புக்கும் கவாடபுரமிருந்த தாம்ரபர்ணிசங்கமத்துக்கும் மத்தியிலுள்ள பிரதேசத்தைக் குறிக்கும். திரு'வழுதிவளநாடன்' என்று ஆழ்வாரே தம்மைத் திருவாய்மொழியிற் குறித்துள்ளார்.

3. புளிக்கீழ்க்காவணத்து.— ஆழ்வார் ஆஸ்தானமண்டபத்துக்கு மேல்புறமாய்நின்று விமானத்தைவளைந்து படிந்திருப்பது. இந்தமரத்தடியில் ஆழ்வார் யோகத்திலமர்ந்திருந்ததனால், பௌத்தருக்குப் போதிமரம்போல ஸ்ரீவைஷ்ணவர்க்கு இம்மரம் விசேஷமானது. இது உறங்குகிறதில்லை, பழுக்கிறதில்லை. அபசாரப்பட்டால், துர்க்கந்தமான திரவம்வடியும்படியானது. இது துவாபராந்தத்தில் யமயதியை உள்விட்டதற்காக ஸ்ரீராமனாற் சபிக்கப்பட்ட (சேஷ)லக்ஷ்மணாம்சமென்று புராணங்கூறும். பார்வைக்கு மிகவும்பழையதாய்ப் பொந்தாயிருக்கிறது. 'புளியாயிரம் பொந்தாயிரம்' என்ற பழமொழி இம்மரம் நெடுங்காலமிருக்கவல்லதென்பதைக் காட்டுகிறது. இப்போது ஏழு தனிமரங்கள்போலக் காணப்படுகிறது. காவணம்—சோலை.

(4) சடகோபதாசன்பந்தல்கீழ்:—இவன் நூற்றுக்கால் மண்டபத்தைக்கட்டி அதன்பக்கப்பத்தி மேற்பாவுகல்லில், தன் ஆசார்யனை ஸ்ரீமணவாளமாமுனிதிருவுருவத்தை அமைத்திருக்கிறான். திருக்கோளூர்ச் சேரசோழபாண்டீச்சுவரர்(சிவன்)கோயிலார்க்கும், திருநகரியாருக்கும் எல்லைச்சம்வாதம்நேர அதை வரையறுத்துத் திருவாழிக்கல்நட்டுக் கோயிலுமண்டபமும்? உண்டாக்கினான். இவனுக்குக் கோயிலில் மரியாதையாய் ஏற்பட்டிருந்த 'திருமண்காப்பு'ப் பாத்தியதையை ஸ்ரீமணவாளமாமுனிகள்வாங்கி, தன்மடத்தைக்கொளுத்தித் தன்னிடத்தில் அபசாரப்பட்டுப் பின்பு தன்திருவடியையாசிரயித்த ஆசார்யபுத்திரரான தெய்வசிகாமணிப்பிள்ளை தேவராஜ ஆச்சான்பிள்ளைக்கு அப்பாத்தியதையைச் சம்மானஞ்செய்தார். இவனுக்கு 'சுசீந்த்ரம் சடகோபதாசன்' என்று பெயர். இவனைக் குறித்த திருப்பணிமாலைச்செய்யுள்வருமாறு :—

" கள்ளவிழ்பூந்தண்ளபத்திருநெடுமாலுடனெங்கோன்காரிமாற
ருள்ளமுவந்துலவுதிருவாய்மொழிமண்டபந்திருநாட்கொருநாட்கண்டான்
பிள்ளைநிலாத்திகழ்சடையோன்கோளூரிவ்வூரெல்லைப்பிசகுதீர்த்த
வள்ளல்சுசீந்திரமுடையான்சடகோபதாதனிகல்மாரவேளே."

ஸ்ரீரங்கத்தார் தம்சாசனத்தில் இவ்வாய்பாட்டுக்குநேரானவிடத்தில் 'சுந்தரபாண்டியன்திருமுற்றப்பந்தலின்கீழ்' என வழங்குவர்.

4. வண்டுவேராபதிமாமுனிகட்டிலில்:- துவராபதி பாண்டிநாட்டிலுள்ளது. இவர் முன்குடுமிஸ்ரீவைஷ்ணவர்போலும்? கழுதூர்க்கு (இவ்வூர் திருநகரிக்கு 22-மைல்தூரத்தில் தென்மேற்காயுள்ளது) வண்டுவராபதிநல்லூர் என்று பெயரேற்பட்டிருந்தது (ஆ-தி சாசனம் XII.) இவர்பெயர்பற்றிப்போலும். இக்கட்டில், மூலஸ்தானத்திற் பொலிந்துநின்றபிரான் எழுந்தருளியிருக்கும் ஆசனத்தைக்குறிப்பது. இவ்விடத்தில் ஸ்ரீரங்கத்தார் (விஜயநகர) 'ஹரிஹரராயன்கட்டில்கீழ்' என்பர்.

5. நாமும்:—சுவாமியின்வாக்காகக்குறிக்கப்பட்டது. இற்றைக்குக் கொஞ்சம் முந்தியகாலத்துச் சாசனங்களிலெல்லாம் இவ்வாறு சுவாமிநியமித்ததாகக் காணப்படும். வெள்ளூர்த்தாமிரசாசனம் செந்தமிழில்வந்துள்ளதைப் பார்க்க.

பெண்டுகள். நாய்ச்சிமார்மூவர்.

சடகோபன். ஆழ்வார்.

6. இராமாநுசன்வீடு:—உடையவர்ஸந்நிதி. இவ்வூரின்மேல்புறமாய் 'ராமாநுஜசதுர்வேதிமங்கலம்' என்னும் பாகத்தின்மத்தியிலிருப்பது. இது சுமார் 520வரு-த்துக்குமுன் ஸந்தியாமண்டபக்ருஷ்ணன்கோயிலாயிருந்தது. இதிலிருந்த கிருஷ்ணனை, திருவாய்மொழிப்பிள்ளையென்னும் இவ்வூரைச் சீர்திருத்தஞ்செய்த ஆசிரியர், ஆழ்வார்ஸந்நிதியில் எழுந்தருளப்பண்ணி அந்த ஸ்தானத்தில், தமக்கு முன்னமேகிடைத்திருந்த பழைய இராமாநுஜவிக்ரகத்தை ப்ரதிஷ்டைபண்ணித் தமதுசிஷ்யராகிய ஸ்ரீமணவாளமாமுனியைக்கொண்டு 'யதிராஜவிம்சதி' என்னும் ஸ்தோத்ரப்ரபந்தத்தையும் ௸ விக்ரகவிஷயமாய்ப் பாடுவித்தார்.

7. எம்பெருமானார் எதிராஜஜீயர்:— இக்கோயிலில் அக்காலத்திருந்த மடாதிபதி. இக்காலத்தில் 'எம்பெருமானார் ஜீயர்' என்றபெயருடன் ஆழ்வார்கோயிலில் முதல் தீர்த்தமரியாதை பெற்றுவருகிறார்கள். இம்மடம் ஆதியில், திருவாய்மொழிப்பிள்ளையால்,சந்யாசியே உடையவரைப் பூஜிக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் ஸ்தாபிக்கப்பெற்றதாகத் தெரிகிறது.

8. சிக்கல்:—மதுரைக்குத்தென்கிழக்கிலுள்ள ஓரூர். இதிலிருந்த முன்குடுமிப்பிராமணர்கள் நானூறுவருஷத்துக்குமுன் ஆழ்வார் திருநகரியிற் குடியேறினர். இதில் ஸ்ரீமணவாளமாமுனிகளின் தகப்பனர் சொற்பகாலம் குடியிருந்தார்.

9. ஜாநீ:—இப்பெயர் பெண்களின்பெயருக்குப்பின் இப்போது 'அம்மாள்' என்று வழங்கும் ஸ்தானத்தில் இவ்வூரில் இன்னமும் ஸர்வசாதாரணமாய் வழங்கிவருகிறது. ஆனாற் சிலர் இதை 'ஜாநகி' யெனத்திரித்துப் பெயர்களுடன்சேர்த்து வியவகாரத்தில் வழங்குகின்றனர். சந்தி=கட்டளை.

கலத்திலது:—பாவாடைவினியோகமென்பது திரண்டபொருள். "உடுத்துக்களைந்தநின்பீதகவாடையுடுத்துக்கலத்ததுண்டு" என்பது பெரியாழ்வார்திருமொழி.

11. விபூதி=ஐச்வர்யம்.

17. பேர்குடி ஆகையில்=குடி அற்றுப்போனபடியால்.
(அந்யவிடம் சென்றுவது சந்ததியற்றுவது)

18. நாராசம்=பெரியதெரு இரண்டு சந்திக்கும் கோணத்திலுள்ள சந்து.

---

XIX–I. திருநகரி. திருக்குருகூர்க்கு 'ஆழ்வார்திருநகரி' யென்னும் பெயர் 600-ஆண்டுக்குமுன்காலத்திலேயே வழங்க ஆரம்பித்துவிட்டதென்று இச்சாசனத்தாலும் இக்காலத்து மற்றச் சாசனங்களாலும் தெரிகிறது.

2. திருநாடுடையபிரான்=ஆழ்வார். திருநாடு என்பது திருவழுதி வளநாடு என்பதன் சுருக்கம்போலும். 'திருநாடு என்பது பரமபத' மென்பர் திருவிருத்தத்தனியன்வியாக்யாதாவும், நூற்றெட்டுத்திருப்பதி அந்தாதியுடையாரும்.

3. போனகம்=திருவமுது.

4. அச்சுப்போலிசையால்=பொற்காசின்வட்டியினால்

5. ஆள்வார் திருக்குருகூர்மாமுனிகள்;— ப்ராஹ்மவித்வான்களுக்கு அருளாளதாதன்மடம்செய்வித்தவரலாறு இவ்வூர்ச்சாசனம் 1-ம் நிம்பரிலும் சொல்லப்பட்டது.

6. சமைஞ்சு=ஒப்புக்கொண்டு.

ஆள்வானை ஸ்ரீகாரிமாறன். பெயரையடுத்து 'ஆள்வான்' என்று வழங்குவது புத்த சைன வைணவசம்பிரதாயம். உ-ம் 'தாதுஆழ்வார்' ஈழம்படிப்படுத்ததாடையாழ்வார் (நீலகேசித்திரட்டுரை) 'அவிரோதியாழ்வார்' (திருநூற்றந்தாதி) சக்கரத்தாழ்வார், கஜேந்திராழ்வான், விபீஷணாழ்வான், கம்பநாட்டாழ்வான்' (வைணவநூல்கள்). முந்தினவரியில் • ஆள்வார்திருக்குருகூர் மாமுனிகள் என்றும் XXI சாசனத்தில் திருக்கொடி ஆழ்வாரென்றும் வழங்கியிருப்பதும் காண்க.

---

XX. இச்சாசனத்திற்கண்ட விஷயம் அமாநுஷ்யமாயிருக்கிறது.

1. பன்மர்=வர்மர்.

சோணுவேழங்கியருளிய=சோணுட்டை ஜயித்து மறுபடியும் சோழனுக்குத் தயவுடன்கொடுத்த.

---

XXI. 3. அனைத்தழகுங்கோண்டான்மண்டபம் = பெருமாள் கொடி ஸ்தம்பத்துக்கு வடக்குள்ளதுபோலும்?

7. ஆனை அச்சு=ஆனைபொறித்த பொற்காசு?

---

XXII. 2. மார்கழித்திருவத்யயனம். இச்சாசனத்தாலும் இன்னும் மற்ற இவ்வூர்ச்சாசனங்களாலும் 'மார்கழித் தமிழ்ப்ரபந்த' உற்சவம் 600 வருஷத்துக்கு முன்னுல் நடக்க ஆரம்பித்துவிட்டதாகத்தெரிகிறது. இதற்குக் கொஞ்சகாலத்துக்கு முன்? இவ்வூர் ஆழ்வாரை ஸ்ரீரங்கத்திற்கு நேரில் எழுந்தருளுவித்துச் சிறிது காலம் இந்த உற்சவம் நடத்திவந்ததாகவும் தெரிகிறது.

திருக்கணுமடை:—அக்காரவடிசில் என்று சொல்லப்படும் சர்க்கரைப்பொங்கல். இதிற்கூறியபடி சபடிஅரிசிக்கு உபடி பருப்பும்(பயறு) ௰ தேங்காய்ப்பாலும் நெய் ஒருபடியும் சர்க்கரை ௬உ பலமும் சேர்த்து உண்டாக்கப்பட்டதென்றுதெரிகிறது.

கருப்புக்கட்டி-கரும்புச் சர்க்கரை.

வெற்றிலைக்கட்டு. ஒருகட்டு ஏழுசுருளையுடையதாகக் கட்டப்பட்டது. ஒரு சுருளுக்குப் பத்துவெற்றிலைபோலும்; ஒருசுருளுக்கு மூன்றுபாக்கு ஏற்படுத்தியிருந்திருக்கிறுர்கள்.

6. ஸ்ரீ பண்டாரம் - கருவேலம்; நகை பொக்கிஷமுதலியவை வைக்குமிடம்.

---

N. B இதில் மாசம், தெய்தி பக்ஷம் திதி கிழமை, நட்சத்திரமுதலியவை கொடுத்திருப்பதால் இச்சாசனம் விசேஷமுடையது. இச்சாசனகாலத்தைக்குறித்துப் பின்னுல் எழுதுவேன்.

---

A. M. சடகோபராமாநுஜாசாரியன்.
நேஷனல்ஹைஸ்கூல், திருச்சிராப்பள்ளி.

# கலியப்தம் 512.

——:o(—)o:——

செந்தமிழ் 12-ந்தொகுதியின் ஆவணிமாதப்பகுதியில் 'ஈழமண்டலப்புலவர்' என்னும்வியாசத்தில், மகா-ா-ா-ஸ்ரீ-ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையவர்கள் "மனுநீதிகண்டசோழன்மகன்மகனாகிய குளக்கோட்டரசன் கலியுகம் 512 இடபமாசம் 10உ திங்கட்கிழமை திரிகோணமலைச்சிவாலயத்தைச் சீரணோத்தாரணஞ்செய்தானெனச் சிலா சாசனங்கூறுகின்றது" எனஎழுதியுள்ளார்கள். கலியப்தம்மாத்திரம் எழுதப்பட்டிருக்குமாயின் அது சரியோ தவறோ என்று ஆராய்தற்கிடமில்லாதுபோவதோடு, சோதிடகணிதசாத்திரம் உண்மையென நிரூபணஞ்செய்வதற்குமில்லாதுபோகும். இப்பொழுது மாதமும் தேதியும் நாளும் கண்டிருப்பதால், அதனை ஆராய்ந்துபார்க்க இடமுண்டாயிற்று. சில ஆண்டுகட்குமுன்னர்ச் செந்தமிழ்வாயிலாக, இப்பொழுதுவழங்கிவரும் சூரியசித்தாந்தகணித மெழுதியுள்ளேன். அதன்படி இப்பொழுது இந்நாள் சரிதானென நிரூபணஞ்செய்யப் புகுந்ததற்கு மன்னிக்கவேண்டுகிறேன்.

கலியப்தமான 512ஐ 365-ல் பெருக்கியதொகையுடன், கலியப்தத்தை நான்கால்வகுத்து வந்ததொகையையு முடன்கூட்டிக்கொண்டு, மறுபடி கலியப்தத்தை ஐந்தாற்பெருக்கி 1237ஐ அதினின்றும்வாங்கி, மிகுதியை 576-ற்கொடுக்கக் கூடியதையுஞ் சேர்த்துக் கூட்டுக. இவ்வாறுகூடியது 187010-17. 48-45. அதாவது கலியுகம்பிறந்து 187010 நாள் 17-நாழிகை 48-விநாடி 45-தற்பரைக்கு, விரோதிகிருதுஸு ப்ரவேசமாயிற்று. இந்நாளை 7-ற்கொடுத்து மிகுதியை வெள்ளிக்கிழமைமுதலாக எண்ணின் அத்தினத்திற்கு மறுதினம் வருஷப்ரவேசதினமாம். அதன்படி புதன்கிழமை வருஷப்ரவேசதினமாகும். இங்குக்கண்டது வைகாசிமாதமாகையால் வருஷப்ரவேசத்தோடு சென்றமாதவாக்கியமாகிய 30-55 32-கூட்ட விரோதிகிருதுஸு வைகாசிமாதப்ரவேசம் சனிக்கிழமை 13-நாழிகை 20-விநாடி 45-தற்பரைக்குப் பிறந்தது. அதனுடன் வேண்டியதினத்திற்கு முன்தேதிவரைகூட்ட 187050 நாளாகும். இதனை ஏழுக்கீந்தமிச்சம் மூன்றாக, மறுதினம் திங்கட்கிழமையாயிற்று.

ஆகவே கலியுகம் 512-க்கு, விரோதிகிருதுஸு வைகாசிமீ 10உ திங்கட்கிழமையென்பது நிரூபிக்கப்பட்டது.

———

இலக்கணவிளக்கபரம்பரை,

திருவாரூர்-சோமசுந்தரதேசிகன்.




ஸ்ரீ:

# மதிப்புரை.

1. மாலினீமாதவம் அல்லது தர்மவிஜயம் என்னும் துப்பறியும் நாவல்:— இது, ம-ா-ா-ஸ்ரீ-R. S. நாராயணஸ்வாமி ஐயர், B.A., B.L., அவர்களால் இயற்றப்பெற்று, "வித்தியாபாநு" ப்பத்திரிகையில் நாளடைவில் வெளிவந்து இப்பொழுது புத்தகரூபமாய் மறுபதிப்பாயிருக்கிறது. இதன் பலநயங்களையும் பத்திரிகையில்வெளிவந்தபொழுதே யெல்லோரும் பார்த்திருப்பார்களாகையால் அவர்களுக்கு நான் திரும்பவும் அவற்றைப்பற்றி யெழுதுதல் மிகையேயாம். ஆங்கிலத்தில் உயர்தரக்கல்வியிற்றேர்ந்த ஐயரவர்கள் அக்கல்வியாலுண்டாகிய அறிவின்பயனை ஆங்கிலங்கல்லாத தமிழரும் எளிதிலடையுமாறு, கல்யாணி, மாண்டவன்மீண்டமாயம், வஸந்தமாளிகைமுதலான இனியதமிழ்நாவல்களையும், இப்புத்தகத்தையும் எழுதி வெளியிட்டிருப்பதாலும், "செந்தமிழ்"க்குரிய விஷயதானங்கள் செய்துவருவதாலும் அவர்களுக்கிருக்கும் தமிழபிமானம் நன்குவெளியாகின்றது. இதன்மேலும் ஆங்கிலத்தினின்றும் தமிழர்தெரிந்துகொள்ளவேண்டிய அரியநூல்களைத் தமிழில் மொழிபெயர்த்துப் புத்தகரூபமாக வெளியிடுவார்களாயின், தமிழ்நாடு மிகவும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டதாகும். இதன்விலை அணா—10.

---

2. நல்லொழுக்கம்:—(முதற்றொகுதி.) இது, ஆங்கிலத்தினின்றும் ஸ்மைல்ஸ்கியாரக்டரின் மொழிபெயர்ப்பாகத் தச்சநல்லூர் ம-ா-ா-ஸ்ரீ இலக்குமணப்போற்றிகளால், தமிழ்நடையிலெழுதி முன்பு "செந்தமிழ்"ப்பத்திரிகையிற் சேர்க்கப்பெற்று இப்பொழுது புத்தகரூபமாயச்சிட்டுவெளியிடப்பெற்றிருக்கிறது. கலாசாலைமாணவர்கள் கற்றற்குரிய தமிழ்நடைப்புத்தகங்களிற் பொதுவான ஒழுக்கநடையைக் கற்பித்தற்கேற்ற சரித்திரப்புத்தகமாக வெளிவந்திருப்பது இதுவொன்றேயென்றுசொல்லும்படி மிகவும் அருமைவாய்ந்தது. இம்முதற்றொகுதியில் முதன்மூன்றதிகாரங்கள்மட்டும் அச்சாயுள்ளன. இதன் விலை அணா—6.

---

மேற்கண்டபுத்தகங்கள்வேண்டுவோர் அவற்றின் ஆசிரியர்கட்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

குறிப்பு :— மேற்கண்டபுத்தகமிரண்டும் "பாண்டியன்புத்தகசாலை"க்குக் கொடுக்கப்பட்டன.

பத்திராதிபர்.

---

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

# 1913ஹு டிசம்பர்மீ 1உ முதல் 31உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ. | அ. | ப. | செலவு | தொகை ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| சங்கம் மெம்பர்களிடமிருந்து பிரவேசக் கட்டணம் உள்பட வருஷச் சந்தா வரவு ரூ 16—0—0 | | | | 1913-ஹு நவம்பர் மீ த்துக்கு சங்கம் மானேஜ்மெண்டாபீசு சிப்பந்திகளுக்கு சம்பளம்செல் ரூ 108-13-3 | | | |
| சங்கம் "செந்தமிழ்" சந்தாதாரரிடமிருந்து பத்திரிகைக்கு சந்தா வரவு ரூ 8—1—0 | | | | ஷை எடிட்டோரியல் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு ஷை செல் ரூ 39—3—2 | | | |
| | | | | ஷை பிரிண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு ஷை செல் ரூ 175—7—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி சந்தா வரவு ரூ | 24 | 1 | 0 | ஷை பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு ஷை செல் ரூ 42-14—7 | | | |
| 1914ஹு நடக்கும் சங்கம் தனித் தமிழ்ப் பரீக்ஷைக்குக் கட்டணம் வரவு ரூ | 1 | 0 | 0 | ஷை பாண்டியன் லைபிரேரி சிப்ந்திக்கு ஷை செல் ரூ 12-0-0 ஷையாருக்கு டிசம்பர் மீ த்து சம்பளத்தினின்றும அட்வான்சு கொடுத்தது ரூ 5 ஆக மொத்தம் செல் ரூ 17—0—0 | | | |
| சங்கப்பதிப்புப் புஸ்தகங்கள் விற்ற வகையில் வரவு ரூ | 119 | 15 | 0 | 1913-ஹு நவம்பர் மீ த்துக்கு சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்குசம்பளத்திற்காகவும், மாணவர்களுக்குபோஷணைக்காகவும் செல் ரூ 122—6—4 | | | |
| ஸ்டாக்கிலிருக்கும் பிரிண்டிங், கலர் ராப்பர் பேப்பர் வகையரு விற்ற வகையில் வரவு ரூ | 46 | 13 | 0 | | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| இச்சங்கமாபீசில் நடந்த வேலைகளுக்கு Printing income வரவு ரூ | | 366 | 1 | 3 |
| ஷை-க்கு Binding income வரவு ரூ | | 62 | 12 | 0 |
| சங்கம் காலி நிலத்தில் வைக்கப் பட்டிருக்கும் மரக்கடைக்கு பிரமாதீசஞு கார்த்திகை மாதத்திற்கு வாடகை வரவு ரூ | | 55 | 0 | 0 |
| 1913ஞு செப்டம்பர் மீ 18உயன்று நடந்த மீட்டிங்கின் No. 7 Resolutionபடி சங்கம்மானேஜிங்கமிட்டியார் சாங்கிஷன்பேரில் பைண்டர் பாலசுந்தரத்துக்கு சங்கத்தினின்றும் கடனுகக் கொடுத்த ரூ. 30லிருந்து முதல் தவணையில் செல்லாக்கிய தொகை வரவு ரூ | 5—0—0 | | | |
| கணக்கில் ஜாஸ்தியாக செலவு போடபபட்ட தொகை வரவு வைத்த வகையில் ரூ | 0—8—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி Miscellaneous வரவு ரூ | ... | 5 | 8 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஆக மேற்காட்டிய விவரப்படி சங்கம் எஸ்டாபிளிஷ்மெண்டுக்கு சம்பளம் செல் ரூ | | 505 | 12 | 4 |
| பிரிண்டிங் ஆபீஸ் சம்பந்தமாக இஞ்ஜின், மெஷீன் வகையரு வுக்கு எண்ணெய் வாங்க செல் ரூ | 17—4—6 | | | |
| ஷை ஆபீஸ் சம்பந்தமான Ink வகையரு கண்டின்ஜன்ஸி சாமான் வாங்க செல் ரூ | 6—4—3 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செல் ரூ | | 23 | 8 | 9 |
| பைண்டிங் ஆபீஸ் சம்பந்தமான வஜ்ஜிரம் வகையரு கண்டின்ஜன்ஸி சாமான் வாங்க செல் ரூ | | 11 | 8 | 11 |
| சங்கமாபீசு உபயோகத்திற்கு Paper வகையரு Stationery சாமான் வாங்க செல் ரூ | 2—15—9 | | | |
| பிரிண்டிங் ஆபீஸ் ஆர்டர்கள் உபயோகத்திற்கு ஷை சாமான் வாங்க செல் ரூ | 97—13—0 | | | |
| பைண்டிங் ஆபீஸ் ஆர்டர்கள் உபயோகத்திற்கு தோல் வகையரு Stationery சாமான வாங்க செல் ரூ | 12—2—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி Stationery சாமான்கள் வாங்க செல் ரூ | | 112 | 14 | 9 |
| Pandiyan Library உபயோகத்திற்கு தருவிக்கும் "Hindu" பேப்பருக்கு சந்தாவுக்காக செல் ரூ | | 4 | 0 | 0 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | ஆபீஸ் உபயோகத்திற்கு ஆயுதங்கள் சில வாங்கவும், லேட் பிரசிடெண்டு Mr. P. S. சுப்பிரமணிய அய்யரவர்கள் Photo Block தயாரிக்கவும் செல் | ரூ | 22 | 2 | 0 |
| | | | Treadle, Oil Engine-Slight Repair செய்த வகையிற் செல் | ரூ | 6 | 10 | 0 |
| | | | சங்கமாபீசு Correspondence, V. P. சம்பந்தமாக போஸ்டேஜ் வகையிற் ரூ 19—10—0, தந்தி வகையிற் ரூ 7— 6—0 ஆக மொத்தம் செல் | ரூ | 27 | 0 | 0 |
| | | | ரெயில்வே பார்சல் மூலம் வந்த சாமான்களுக்கு ரெயில் சார்ஜுக்கு செல் | ரூ | 0 | 8 | 0 |
| | | | சங்கமாபீசு ஆயில் எஞ்சினுக்கு லைசென்ஸுக்காக ரூ 50-0-0; பிரிண்டிங் ஆபீஸ் தொழில்வரிக்காக ரூ 6-0-0: எடிட்டர் தொழில்வரிக்காக ரூ 4-0-0: ஆக மொத்தம் Tax செல் | ரூ | 60 | 0 | 0 |
| | | | Sivaganga வகையரு இடங்களுக்கு பிரிண்டிங், பைண்டிங் ஆர்டர்கள் சம்பந்தமாக போய்வந்த வகையிற் செல் ரூ 7—8—0 | | | | |
| | | | Over-time work செய்த சங்கம் சிப்பந்திகளுக்கு சம்பளம் செல் 18.-12-11 | | | | |




| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | ஆபீஸ் Business சம்பந்தமாகவண்டி வாடகைக்குச் செல் ரூ 2—2—0<br>628-ம் கிர். பில்படி இவ்வாபீசில் அச்சிட்ட சிவலிங்கமகத்துவம் வகையரு புத்தகங்களுக்கு Copy Right Fee செலுத்திய வகையிற் ரூ 4—1—0<br>கணக்கில் ஜாஸ்தியாக வரவு வைக்கப்பட்ட தொகை செலவு போட்ட வகையிற் ரூ 0—6—0<br>ஆக மேற்காட்டிய விவரப்படி Miscellaneous செலவு ரூ | 32 | 13 | 11 |
| | | | | ஆகமொத்தம்செலவு | 806 | 14 | 8 |
| | | | | போகபாக்கியிருப்பு* | 441 | 14 | 9 |
| ஆக மொத்தம் வரவு ரூ | 681 | 2 | 3 | *By pass Book 367—9—1 | | | |
| சென்ற நவம்பர் மீ' த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ரூ ... | 567 | 11 | 2 | By cash ... 74—5—8 | | | |
| ஆக மொத்தம் ... | 1248 | 13 | 5 | ஆக மொத்தம் ... | 1248 | 13 | 5 |

T. A. Subbavenkatarama Iyer.
*Manager.*
12—1—14.

*Audited and found Correct.*
S. Gopalaswami Aiyengar,
15—1—14. *Auditor.*

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

# 1914ஹூ ஜனவரிமீ 1ௗ முதல் 31ௗ முடிவு வரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை. ரூ. அ. ப. | செலவு. | தொகை. ரூ. அ. ப. |
|---|---|---|---|
| புதுக்கோட்டை சமஸ்தானம் தர்பார் ஆபீசிலிருந்து 1913ஹூ டிசம்பர்மீ த்திற்கும், 1914ஹூ ஜனவரிமீ த்திற்கும் சந்தா வரவு ரூ 100-0-0 | | சங்கம் மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகளுக்கு 1913ஹூ டிசம்பர்மீ த்துக்கும் 1914ஹூ ஜனவரிமீ சம்பளத்தினின்றும் அட்வான்சாகவும் சம்பளம் செல் ரூ 110—14—2 | |
| 1913ஹூ டிசம்பர்மீ 16ௗ முதல் 1914ஹூ டிசம்பர்மீ முடிய கானாடுகாத்தான் மகா-ா-ா-ஸ்ரீ S. RM. M. CT. பெத்தாச்சி செட்டியாரவர்களிடமிருந்து மீ 1க்கு ரூ 50 வீதம் சந்தா வரவு ரூ 625-0-0 | | ஷை எடிட்டோரியல் ஆபீஸ சிப்பந்திகளுக்கு ஷை ஷைக்காக செல் ரூ 47—0—0 | |
| | | ஷை பிரிண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு ஷை ஷைக்காக செல் ரூ 195—4—10 | |
| தேவகோட்டை மகா-ா-ா-ஸ்ரீ லெ. அரு. ராம. ராமநாதஞ் செட்டியாரவர்களிடமிருந்து சங்கம் Building Fundக்காக நன்கொடை வரவு ரூ 150—0—0 | | ஷை பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு ஷை ஷைக்காக செல் ரூ 47—14—2 | |
| | | ஷை பாண்டியன் லைப்ரேரி சிப்பந்திக்கு 1913ஹூ டிசம்பர்மீ த்திற்கு செல் ரூ 7— 0—0 | |
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 875 0 0 | 1913ஹூ அக்டோபர் மீ த்துக்கு பாக்கி நின்றதற்கும், டிசம்பர் மீ த்துக்கும் சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு சம்பளத்திற்காகவும் மாணவர்களுக்கு | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சங்கம் மெம்பர்களிடமிருந்துபிரவேசக்கட்டணம் உள்பட வருஷச்சந்தா வரவு ரூ | 44—0—0 | | | | |
| சங்கம் "செந்தமிழ்" சந்தாதாரிடமிருந்து பத்திரிகைக்கு சந்தா வரவு ரூ | 22—2—0 | | | | |
| ஆகமேற்காட்டிய விவரப்படி சந்தா வரவு | | ரூ | 66 | 2 | 0 |
| பத்திரிகையில் வெளியிடப்படும் விளம்பரங்களுக்கு சார்ஜ் வரவு | | ரூ | 8 | 2 | 0 |
| Co-operative storesல் போட்டு வரும் தொகையின்பேரில் வட்டி வரவு | | ரூ | 5 | 7 | 1 |
| சங்கம் 1914ஹு ஆங்கிலகலாசாலை மாணவர்கள் தமிழ்ப்பரீக்ஷைக்கு பிரவேசக்கட்டணம் வரவு | | ரூ | 13 | 6 | 0 |
| சங்கப்பதிப்புப்புஸ்தகங்கள் விற்ற வகையில் வரவு | | ரூ | 149 | 1 | 0 |
| ஸ்டாக்கிலிருக்கும் பிரிண்டிங், கலர் ராப்பர் பேப்பர் வகையறா விற்ற வகையில் வரவு | | ரூ | 17 | 2 | 4 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| போஷணைக்காகவும் செல் ரூ | 79—10—9 | | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி சங்கம் எஸ்டாபிளிஷ்மெண்டுக்குச் சம்பளம் செல் | | ரூ | 487 | 11 | 11 |
| பிரிண்டிங் ஆபீஸ் சம்பந்தமாக இஞ்சின், மெஷீன் வகையறாவுக்கு எண்ணெய் வாங்க செல் ரூ | 15—13—0 | | | | |
| ஷை ஆபீஸ் சம்பந்தமான Ink வகையறா கண்டின்ஜன்ஸி சாமான் வாங்க செல் ரூ | 2—12—6 | | | | |
| ஆக மேற்காட்டிய விபரப்படி செல் | | ரூ | 18 | 9 | 6 |
| பைண்டிங் ஆபீஸ் சம்பந்தமான வஜ்ஜிரம் வகையறா கண்டின்ஜன்ஸி சாமான் வாங்க செல் | | ரூ | 25 | 6 | 11 |
| சங்கம் ஆபீஸ் உபயோகத்திற்கு Paper வகையறா Stationery சாமான் வாங்க செல் ரூ | 4—10—6 | | | | |
| பிரிண்டிங் ஆபீஸ் ஆர்டர்கள் உபயோகத்திற்கு ஷை சாமான்கள் வாங்க செல் ரூ | 107—2—0 | | | | |
| பைண்டிங் ஆபீஸ் ஆர்டர்கள் உபயோகத்திற்கு தோல் வகையறா Stationery சாமான வாங்கசெல் | 90—4—0 | | | | |
| கலாசாலை உபயோகத்திற்கு Paper வகையறா Stationery சாமான் வாங்க செல் ரூ | 0—12—0 | | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி Stationery சாமான்கள் வாங்க செல் | | ரூ | 202 | 12 | 6 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இச்சங்கமாபீசில் நடந்த வேலைகளுக்கு Printing income வரவு | | ரூ | 261 | 10 | 6 |
| ஷை க்கு Binding income வரவு | | ரூ | 35 | 6 | 10 |
| சங்கம்கீாலிசிலத்தில் வைக்கப்பட்டிருக்கும் மரக்கடைக்கு பிரமாதீசஹு மார்கழிமாதத்திற்கு வாடகை வரவு | | ரூ | 55 | 0 | 0 |
| 1913ஹு செப்டம்பர்மீ 18உயன்று நடந்த மீட்டிங்கின் No. 7 Resolutionபடி, சங்கம் மானேஜிங்கமிட்டியார்சாங்கிஷன் பேரில் பைண்டர் பாலசுந்தரத்துக்கு சங்கத்தினின்றும் கடனாகக் கொடுத்த ரூ 30 லிருந்து இரண்டாம் தவணையில் செல்லாக்கிய தொகை வரவு ரூ | 5—0—0 | | | | |
| சிவகெங்கைக்குப்போய் பிரிண்டிங், பைண்டிங் ஆர்டர்கள் வாங்கிவருவதற்காக ஆபீஸ்பில் கலெக்டரிடம் 252ம்நிர். வவுச்சர்படி கொடுத்த ரூ. 7லிருந்து பாக்கி வாபஸ் வரவு ரூ | 2—3—0 | | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| "Pandiyan Library" உபயோகத்திற்கு தருவிக்கும் "Hindu" பேப்பருக்கு 1 மீத்திற்கும், "Swadesamitran" பத்திரிகைக்கு 1913ஹுத்திற்கும் சந்தா செல் | ரூ | 8 | 0 | 0 |
| சங்கம் பிரசிடெண்டு ராஜாராஜேஸ்வர சேதுபதி அவர்களின் Photo Block தயாரிப்பதற்கும், ஆபீஸ் உபயோகத்திற்கு Figure Blocks தயார் செய்ததற்குமாகச்செல் | ரூ | 26 | 12 | 0. |
| பிரிண்டிங் மெஷீன் வகையரு Slight Repair செய்த வகையிற் செல் | ரூ | 5 | 6 | 11 |
| சங்கம் ஆபீசு Correspondence V. P. etc சம்பந்தமாக போஸ்டேஜ் வகையிற் ரூ 20-14-6; தந்தி வகையிற் ரூ. 5 - 14—0 ஆக மொத்தம் செல் | ரூ | 26 | 12 | 6 |
| சங்கம் ஆபீஸ் வைத்திருக்கும் கட்டடத்திற்கு 1913ஹு அக்டோபர்மீ முதல் செல்லவேண்டிய வாடகையினின்றும் அட்வான்சு செல் ரூ. 45—14—6; சங்கம் காலி நிலத்திற்கு முனிசிபாலிடி வரிக்காக செல் ரூ. 41—4—0: ஆக மொத்தம் செல் | ரூ | 87 | 2 | 6 |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஆகமேற்காட்டிய விவரப்படி Miscellaneons வரவு | ரூ | 7 | 3 | 0 | இச்சங்கத்துக்கு கடனாக வரவு வந்திருந்த ரூ. 100-லிருந்து முன் செல்லாக்கியது போக பாக்கி Honorary Secretary Mr. T. N. சுந்தரராஜ அய்யங்காருக்குச் செல்லாக்கியது ரூ | 50—0—0 | | | |
| | | | | | இச்சங்கத்துக்கு கடனாக வரவு வந்திருந்து முன் செல்லாக்கியது போக பாக்கி செல்லாகவேண்டிய ரூ. 125-லிருந்து Honorary Secre ary Mr. T C. ஸ்ரீநிவாஸையங்காருக்கு Part Payment ஆக செல் ரூ | 100—0—0 | | | |
| | | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செல்லாக்கியது ரூ | | 150 | 0 | 0 |
| | | | | | சங்கம் Perpetual Calendarக்காக Tin Protector செய்வதற்கு அட்வான்ஸ செல் ரூ | 3—0—0 | | | |
| | | | | | Arrears வசூல் செய்வதற்கு இராமநாதபுரம் போய்வந்த வகையில் செல் ரூ | 2—8—0 | | | |
| | | | | | ஆபீஸ் Business சம்பந்தமாக வண்டிவாடகைக்குச் செல் ரூ | 0—2—0 | | | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி Miscellaneous செலவு | ரூ | 5 | 10 | 0 |
| ஆகமொத்தம் வரவு | ரூ | 1493 | 8 | 9 | ஆக மொத்தம் செலவு | ரூ | 1044 | 4 | 9 |
| | | | | | போக பாக்கியிருப்பு * | | 891 | 2 | 9 |
| சென்ற 1913ஞு டிசம்பர்மீ த்தின் கடைசித்தேதியில் நின்றபாக்கித் தொகை | ரூ | 441 | 14 | 9 | * By Pass Book No. 467: Rs. 673—0—2<br>Do. 102: Rs. 150—0—0<br>By cash Rs. 68—2—7 | | | | |
| ஆக மொத்தம் | ரூ | 1935 | 7 | 6 | ஆக மொத்தம் | ... | 1935 | 7 | 6 |

T. A Subbavenkatarama Iyer,
*Manager.*
16—2—14.

*Audited and found correct.*
S. Gopalaswami Aiyengar,
*Auditor.*
14—3—14.

# மதுரைத் தமிழ்ச்சங்கம்.

இச்சங்கத்தார் 1914-ஞ பிப்ரவரிமீ 28-ம் தேதியில் நடாத்திய ஆங்கில கலாசாலைத் தமிழ்ப் பரீக்ஷைகளிற் றேறிப் பரிசும் யோக்கியதா பத்திரமும் பெறும் மாணாக்கர்களின் விவரம்.

## எப். ஏ. பரீக்ஷை.

### I-வது வகுப்பு.

1. 7. N. ஹாலாஸ்யம், S. P. G. காலேஜ், திருச்சினாப்பள்ளி. (முதற்பரிசு ரூ 40 பெறத்தக்க தங்கப்பதக்கம்.)
2. 9. G. S. மஹாதேவன் ஷை ஷை. (இரண்டாவது பரிசு ரூ 35 )
3. 11. V. P. சிவராமகிருஷ்ணன் ஷை ஷை (மூன்றாவது பரிசு ரூ 30.)
4. 2. V. கிருஷ்ணஸ்வாமி, மதுரைக்காலேஜ், மதுரை. (நான்காவது பரிசு ரூ 25.)
5. 3. T. S. வள்ளிநாயகம், ஷை ஷை (ஐந்தாம் பரிசு ரூ 20.)
6. 12. G. N. மோசெஸ், ஸ்காட் கிறிஸ்தவ காலேஜ், நாகர்கோயில்.

### II-வது வகுப்பு.

1. 4. V. வெங்கடசுப்பிரமணியன், மதுரைக்காலேஜ் மதுரை.
2. 5. D. கேசவன் S. P. G. காலேஜ், திருச்சினாப்பள்ளி.
3. 16. V. எக்னஸ்வாமி, பிண்டிலே காலேஜ், மன்னார்குடி.
4. 15. P. K. இராமஸ்வாமி, ஷை ஷை.
5. 1. S. கணபதி, மதுரைக்காலேஜ், மதுரை.

## மெற்றிக்குலேஷன்.

### I-வது வகுப்பு.

1. 47. S. ராஜா, முனிசிபல் காலேஜ், சேலம். (முதற்பரிசு ரூ 30 வெள்ளிப்பதக்கமும் மீத ரூபாயும்.)
2. 46. S. M. முத்துஸ்வாமிபடையாச்சி ஷை ஷை (இரண்டாவது பரிசு ரூ 25.)
3. 48. S. V. மஹாதேவ அய்யர், ஷை ஷை (மூன்றுவது பரிசு ரூ 20.)
4. 24. K. பைரவன், மதுரைக்காலேஜ், மதுரை. (நான்காவது பரிசு ரூ 15.)
5. 99. K. கோபாலகிருஷ்ணன், முனிசிப்ல் ஹைஸ்கூல், மாயவரம். (ஐந்தாம் பரிசு ரூ 12.)
6. 45. V. இராமஸ்வாமி அய்யர், முனிசிபல் காலேஜ், சேலம்.
7. 49. T. V. குப்புஸ்வாமி, ஷை ஷை
8. 20. S. ஸ்ரீநிவாஸன், மதுரைக்காலேஜ், மதுரை.
9. 25. V. வேதாந்தம், ஷை ஷை
10. 63. N. தியாகராமன், கலியாணசுந்தரம்ஹைஸ்கூல், தஞ்சை.

### II-வது வகுப்பு.

1. 39. A. குணமணி, ஸ்காட்கிறிஸ்தவகாலேஜ், நாகர்கோயில்.
2. 110. C. அமிர்தகணேசன், பிண்டிலே காலேஜ், மன்னார்குடி.
3. 50. D. ஸ்ரீநிவாஸன், முனிசிபல் காலேஜ், சேலம்.
4. 36. S. சுந்தரலிங்கம், C. M. S. காலேஜ், திருநெல்வேலி.
5. 35. R. இராஜகோபாலன், நாஷனல் ஹைஸ்கூல், திருச்சி.
6. 40. S. V. Daniel, ஸ்காட்கிறிஸ்தவகாலேஜ், நாகர்கோயில்.
7. 52. N. V. வரதராஜன், முனிசிபல் காலேஜ், சேலம்.
8. 43. P. M. அம்புரோஸ், ஸ்காட் கிறிஸ்தவ காலேஜ், நாகர்கோயில்.
9. 33. S. S. இராஜகோபாலன், மதுரைக்காலேஜ், மதுரை.
10. 19. S. ஜெகன்னாதன் , ஷை ஷை
11. 77. J. நரசிங்காரவ் ஊரீஸ் காலேஜ், வேலூர்.
12. 122. R. ரெங்கஸ்வாமி, நாஷனல் ஹைஸ்கூல், மன்னார்குடி.

